Phone: No. 2241 | தின இதழ் | Regd. No. M. 5934



# ஜனசக்தி

ஆசிரியர்:
ப. ஜீவானந்தம்.

மலர் 14] பக்கம் 8 :: விலை அணா 2 [இதழ் 301

சென்னை 21-6-58 விளம்பி. ஆனி-7 சனி (வெளியூர் 22-6-58 விளம்பி, ஆனி 8 ஞாயிறு)

### தொழிற்சங்கத் தந்தை சக்கரைச் செட்டியாருக்கு இ. எம். எஸ். அஞ்சலி

சென்னை ஜூன் 21—

கேரள முதலமைச்சர் தோழர் இ. எம். எஸ் நம்பூதிரிபாட் இன்று காலை கீழ்ப்பாக்கம் கல்லறைக்குச் சென்று சக்கரை செட்டியாரின் சமாதியின்மீது மலர்வளையம் சமர்ப்பித்து அஞ்சலி செலுத்தினர்.

# தியாகிகளுக்கு லட்சம் பேர் அஞ்சலி

## 10 மைல் தூரம் ஜனசமுத்திரம்

## தியாகிகள் கட்டிய தொழிற்சங்க ஒற்றுமை வாழ்க!

சென்னை ஜூன் 21—

ஒரு லக்ஷம் சென்னை நகர மக்கள் துக்க கோலத்துடன் பின்தொடர்ந்து வர, மலர் மாலைகளாலும் தொழிற்சங்கக் கொடிகளாலும் அலங்கரிக்கப்பட்ட வண்டிகளில், சுட்டுக் கொல்லப்பட்ட வீரத்தியாகிகளான கோபால், எத்திராஜ், வேதாசலம், நடராஜன ஆகியவர்களின் சடலங்கள் வைக்கப்பட்டு, பத்து மைல் தூரம் வரை உருக்கமானதோர் பிரம்மாண்டமான மௌன ஊர்வலம் நேற்று நடைபெற்றது.

கோபால், 12 வயது சிறுவன் வேதாசலம் ஆகிய இருவரின் சடலங்களும் பிராட்வேயிலுள்ள ஹார்பர் தொழிலாளர் சங்கத்திலிருந்தும், எத்திராஜ் சடலம் பெரம்பூர் மதராஸ் லேபர் யூனியனிலிருந்தும், நடராஜன் சடலம் இராயபுரம் பனைமரத்தொட்டியிலிருந்தும் ஊர்வலமாக எடுத்துவரப் பட்டன.

வீரத்தியாகிகளுக்கு வழியெலாம் மாலைகளிட்டு, மலர்மாரி பெய்து நடுத்தரவர்க்க ஊழியர்களும் அவர்களது சங்கங்களும் வணக்கம் செலுத்தினர்கள்

சுட்டுக் கொல்ல பட்டவர்களின் சடலத்தை அன்றே அல்லது மறுநாளோ உறவினர்களிடம் ஒப்படைக்கப்படுவது வழக்கம். ஆனால் இந்நால்வரின் பிணங்களையும் 5 நாள் கழித்துத்தான் போலீஸார் தந்தார்கள். நேற்றுக்கு முன்தினம், தையல் தொழிலாளி வஹாப்பின் சவத்தையும் துறைமுகத் தொழிலாளி மணியின் சவத்தையும் கொடுத்தார்கள். நேற்றுதான் மீதி நால்வரின் சவங்களையும் கொடுத்தார்கள்.

### வரிசையில் வணக்கம்

பிராட்வே ஹார்பர் சங்கத்தின் முன், கோபாலின் பிரேதமும், தாயாருக்கு டீ வாங்கச் சென்ற போது கடைமுன் சுட்டுக் கொல்லப்பட்டு மண்டை ஓடு பெயர்ந்து, மூளை சிதறி விழுந்த சிறுவன் வேதாசலத்தின் பிரேதமும் வைக்கப்பட்டிருந்தது. இவ் வீரத்தியாகிகளுக்கு வணக்கம் செலுத்த ஆண்களும் பெண்களும் ஆயிரக் கணக்கில், 'க்யூ' வரிசையில் வந்து கண்ணீர் சிந்திய வண்ணம் வணக்கம் செலுத்திச் சென்ற காட்சி உருக்கமாக இருந்தது. தாங்க முடியாத அந்தக் கூட்டத்தை செந்தொண்டர்களும், செங்கிற சார்ஜெண்ட் தொப்பிகளணிந்த தொண்டர் படைத் தலைவர்களும் அற்புதமாக ஒழுங்கு படுத்தினர்கள். கோபாலனுடைய மனைவியும் 4 வயது குழந்தையும், 15 நாட்களுக்கு முன் பிறந்த இரட்டைக் குழந்தைகளும் தாய் தகப்பனும் அழுது கொண்டிருந்தார்கள். வேதாசலத்தின் தாயும் தகப்பனும் வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு கதறிக் கொண்டிருந்தார்கள்.

### தலைவர்கள் முன் செல்ல

மாலை 6 மணி! மேலவை கிறுத்தம் செய்து அணி அணியாய் வரும் தொழிலாளர் மீது போலீஸ் படை தாக்குவது போன்ற பெரிய படம் ஒன்று வைக்கப்பட்ட, திறந்த வண்டியில் கோபால், வேதாசலம் பிரேதங்

(2-ம் பக்கம் பார்க்க)

### குண்டடிபட்ட முகமது ஷெரீப் மரணம்

### இத்துடன் இறந்தவர்கள் தொகை 7 ஆகிறது

சென்னை, ஜூன் 21—

ஜூன் 16-ந்தேதி சென்னை ஹார்பர் 'கேட்'டுக்கு முன்னால் நடைபெற்ற போலீஸ்துப்பாக்கிப் பிரயோகத்தில் குண்டடிபட்ட முகமது ஷெரீப் என்ற ஹார்பர் தொழிலாளி (வயது 32) ஜெனரல் ஆஸ்பத்திரியில் நேற்று உயிர் நீத்தார் என்று தகவல் கிடைத்துள்ளது. இவருடன், துப்பாக்கி வெடியினால் உயிர் நீத்தவர்களின் தொகை 7 ஆகிறது.



பிராட்வே ஹார்பர் சங்கத்தின் முன் வீரத் தியாகிகள் கோபால், சிறுவன் வேதாசலம் சடலங்கள்: பையனின் மண்டை ஓடு சிதறிவிட்டதால் துணியால் முகம் மறைக்கப்பட்டுள்ளது. கூடையில் விளக்கு எரிந்து கொண்டிருக்கிறது.

# ஜனசக்தி

சென்னை 21-6-1958


## லெபனானில் அபாய நிலை

சுதந்திரமான நாடாக அரசுரிமையுள்ள நாடாக லெபனான் திகழ வேண்டும்; பாரம்பரையாக வந்துள்ள நடுநிலைமையை அனுசரிக்க வேண்டும்; அந்நிய ஏகாதிபத்தியங்களின் ஆடும் பாவையாக இருக்கக்கூடாது; அரபு நாடுகளின் ஐக்கியத்தைப் பேணி வளர்க்க வேண்டும் என்ற நோக்கங்களுடன் லெபனானிலுள்ள தேசபக்த ஸ்தாபனங்கள், முன்னேற்றக் கட்சிகள், எதிர்க்கட்சிகள் போராடி வருகின்றன.

இந்தப் போராட்டம் நூற்றுக்கு நூறு உள்நாட்டு விவகாரம். உள்நாட்டில் ஊழல் மிகுந்த ஜனதிபதி சமூன் ஆட்சி மாற வேண்டும் என்பது மக்களின் ஏகோபித்த கோரிக்கை. தேசபக்தியுள்ள அனைவரும், லெபனானின் முன்னேற்றத்தில் கருத்துள்ள அனைவரும் மதகுருக்கள் உட்பட சகலரும் இதற்கு உறுதுணையாக நிற்கின்றார்கள்.

ஆனால் சமூன் ஆட்சி இந்த உண்மைகளைத் திரையிட்டு மறைத்து, ஐக்கிய அரபுக் குடியரசின் தூண்டுதலும் தலையீடும் இருப்பதால்தான் கலகம் மூண்டுள்ளதாகப் பசப்புகிறது. ஆட்சியில் மந்திரிகள் பலர், முக்கிய நிர்வாகிகள் பலர் சமூன் ஆட்சி ஓட்டைப் படகு என்று அதற்குத் தலைமுழுகி மக்கள் விடுதலைப் போர் முகாமில் சேர்ந்து நிற்கின்றனர்.

இப்போது சமூன் ஆட்சியின் அஸ்திவாரமே ஆட்டம் கண்டு விட்டது. எனவே சர்க்காரைப் பாதுகாத்துக் கொள்ள அந்நியர் உதவியைக் கோருகிறார் சமூன். வெளி விவகார மந்திரி மாலிக் ஐ நா.விடம் முறையிட்டுள்ளார். டல்லசையும் அமெரிக்க இரகசியப் போலீஸ் தலைவனையும் அவர் பேட்டி கண்டிருக்கிறார்.

ஐக்கிய அரபுக் குடியரசின் மீது காழ்ப்பு வைத்திருக்கும் பிரிட்டனும், அமெரிக்காவும் தருணம் பார்த்து நிற்கின்றன. இஸ்ரேலைத் திரையாக வைத்துக் கொண்டு தலையிட்ட ஏகாதிபத்தியவாதிகளுக்கு மூக்குடைபட்டது. எனவே இப்போது லெபனானின் மூலம் அந்த தலையீட்டுத் 'திருப்பணி'யைச் செய்யத் துடிப்பாய்த் துடிக்கின்றன.

பிரிட்டன் சைப்ரஸிற்கு அனுப்பியுள்ள படைகளை விமான மூலம் லெபனானில் இறக்கத் தயாராக இருக்கிறது. அமெரிக்க 6-வது கடற்படை மூவாயிரம் படை வீரர்களுடன் விரையத் தயாராக இருக்கிறது.

அண்மையில் பிரிட்டிஷ் பிரதமர் மாக்மிலன் ஐஸன் ஹோவரை சந்தித்துப் பேசியது தலையீட்டுக்குப் பச்சைக் கொடியே என்று கருதப்படுகிறது. சமூன் உதவி வேண்டும் என்று கூக்குரலிடுகிறார். ஐஸன்ஹோவர் சித்தாந்தத்தின் அடிப்படையில் லெபனானை பாதுகாப்பதற்காக படைகளை அனுப்பும் அபாயம் நெருங்கியுள்ளது.

இவ்வாறு படைகளை இறக்கும் நிலை ஏற்பட்டால் பிரிட்டனும் அமெரிக்காவும் ஆக்கிரமிப்பாளர்கள் என்று குற்றம் சாட்டப்படுவார்கள் என்று பிரிட்டிஷ் பத்திரிகையான நியூஸ் கிரானிகள் எழுதியுள்ளது.

சமூன் ஆட்சி பிரதான எதிர்க் கட்சிகளை எல்லாம் சட்டவிரோதமாக்கியுள்ளது. இஸ்ரேலிலிருந்தும் அமெரிக்காவிடமிருந்தும் சமூன் சர்க்கார் படைகள் ஆயுதங்கள் பெற்று வருகின்றன. லெபனானைத் தளமாக்கிவைத்துக் கொண்டு ஐக்கிய அரபு நாடுகள் மீது பழிவாங்க வேண்டும் என்பதே ஏகாதிபத்தியவாதிகளின் ஏக நோக்கம். லெபனானை இராக் ஜோர்டானுடன் கூட்டாக இணைத்து அரபு தேசியத்தை என்றென்றைக்கும் குத்திவரும் முள்ளாக வைத்திருக்கவே விரும்புகின்றன.

சில நிபந்தனைகளின் பேரில் அமெரிக்கா படைகளை அனுப்பும் என்று டல்லஸ் முன்பே ஒரு முறை கொக்கரித்திருந்தார். இப்போது நடைமுறையில் தலையீட்டுக்கு முஸ்தீப்பு நடக்கிறது.

சமூன் ஆட்சி தனது ஏகாதிபத்திய அடிவருடிக் கொள்கையைத் தொடர்ந்து நடத்த உள்நாட்டில் ஜனநாயக சக்திகளை ஒடுக்கப் பகீரதப் பிரயத்தனம் செய்கிறது. இதற்காக ஏகாதிபத்திய வாதிகள் தலையீடு நடத்தவும் இடமளித்துள்ளது. அரபுக் குடியரசு தலையிட்டுக் கலகக்காரர்களுக்கு உதவுவதாகப் புகார் செய்வது முழுப் பூசணிக் காயை சோற்றில் மறைக்கச் செய்யும் சாகசம். இந்தப் புகாருக்கு இடமே இல்லை.

உள்நாட்டு விவகாரம் ஒன்றை சர்வ தேசியப் பிரச்சினையாக்கி ஐ நா.விடம் புகார் கொண்டு சென்றது. ஐ. நா. தீர ஆலோசிக்காமல் பார்வையாளர் கோஷ்டி அனுப்பியுள்ளது அடுத்தபடியாக ஐ. நா.படைகள் கோரப்படலாம். இவையாவும் அந்நியத் தலையீட்டுக்கு ஆயத்தங்களே. அந்நியத் தலையீடு ஏற்பட்டால் முழு மூச்சுடன் எதிர்ப்போம் என்று விடுதலை இயக்கத் தலைவர்கள் அறைகூவியுள்ளனர்.

பஞ்சசீலத்தை அங்கீகரித்துள்ள இந்தியா சார்பிலும் ஒருவர் ஐ நா. பார்வையாளராகச் சென்றுள்ளார். விபரீத விளைவுகள் எதுவும் ஏற்படாமல், தலையீட்டுக்கு இடமளியாமல் ஆவன செய்ய வேண்டிய கடமை இந்தியாவுக்கு உண்டு. லெபனான் மக்களின் பக்கம் இந்திய மக்களின் ஆதரவு, ஜனநாயக சக்திகளின் பூரண ஆதரவு இருக்கும் என்பதில் ஐயமில்லை.

## சென்னையில் இ. எம். எஸ். நம்பூதிரிப்பாட்

### விமான நிலையத்தில் வரவேற்பு

சென்னை, ஜூன் 20—

கேரள முதலமைச்சர் இ. எம். எஸ். நம்பூதிரிப்பாட் இங்கு விமான மூலம் வந்து சேர்ந்தார். சமாதானக் கமிட்டி உட்பட பல ஸ்தாபனங்கள் சார்பில் விமான நிலையத்தில் அவருக்கும் கேரள சட்ட மந்திரி வி. ஆர் கிருஷ்ணய்யருக்கும் வரவேற்பளிக்கப்பட்டது.

கேரள கல்வி மசோதா விஷயத்தில் சுப்ரீம் நீதி மன்றம் கோரியுள்ள மாறுதல்களை முறையாக நிறைவேற்றுவோம் என்றார் அவர். எந்தக் கட்சியும் வேறு ஒரு கட்சி மீது விரோதக் குரோத மனப்பான்மை காட்டலாகாது என்றார்.

## காளீஸ்வரா மில் நிர்வாகத்திற்கு சென்னை ஹைகோர்ட் தாக்கீது

### தொழிலாளருக்கும், கிளார்க்குகளுக்கும் ஏப். மாத சம்பளத்தை உடனே கொடுக்கவும்

சென்னை, ஜூன் 20—

கோவை காளீஸ்வரா மில் நிர்வாகம், தன் மில்லில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கும், கிளார்க்குகளுக்கும் ஏப்ரல், மே மாதங்களுக்குரிய சம்பளத்தைக் கொடுக்கவில்லையென்றும், அதை உடனே வழங்கும்படி செய்ய வேண்டுமென்றும் கோரி, கோவை ஜில்லா மில் தொழிலாளர் சங்கம் சென்னை ஹைகோர்ட்டில் மனுச் செய்து கொண்டிருந்தது.

தொழிற்சங்கத்தின் சார்பில் அட்வகேட் திரு கே. வி சங்கரன் கோர்ட்டில் ஆஜராகி வாதித்தார்

நீதிபதி கணபதியா பிள்ளை அவர்கள் ஜூன் 17-ந் தேதியன்று மேற்படி மனுவின்மீது அளித்த தீர்ப்பில், காளீஸ்வரா மில் நிர்வாகம், தன் மில்லில் வேலை செய்யும் தொழிலாளிகளுக்கும், இதர கிளார்க்குகள் முதலிய சிப்பந்திகளுக்கும் ஏப்ரல் மாத சம்பளத்தை உடனடியாகக் கொடுக்க வேண்டுமென்றும், அதற்குப் பிறகு ஒவ்வொரு மாத சம்பளத்தையும் அடுத்த மாதம் 10-ந் தேதயன்று கூறாராகக் கொடுக்க வேண்டுமென்றும் தாக்கீது பிறப்பித்துள்ளார்.

மேலும், கோவை ஜில்லா மில் தொழிலாளர் சங்கத்திற்கு, காளீஸ்வரா மில் நிர்வாகம், இந்த வழக்கின் செலவு தொகையைக் கொடுக்க வேண்டுமென்றும் தீர்ப்புக் கொடுத்துள்ளார்.

## தியாகிகளுக்கு லட்சம் பேர்...

(1ம் பக்கத் தொடர்ச்சி)

கள் கிடத்தப்பட்டு, ஊர்வலம் ஆரம்பித்தது. தலைவர்கள் ஏ. எஸ் கே. அய்யங்கார், ஹார்பர் சங்கத் தலைவர் ராமசாமி, பி. ராமமூர்த்தி, பார்வதி கிருஷ்ணன் எம். பி, கே. டி கே. தங்கமணி எம்.பி. மோகன் குமாரமங்கலம், ஞானசாமி, பி.கருப்பண்ணன், ஆர். ராமநாதன், தபால் ஊழியர் தலைவர் கே. ராமமூர்த்தி ஆகியோர் முன் செல்ல, தியாகி கோபாலின் குழந்தைகளை ஏந்தி தாயார் முன்வர, பேண்டு வாத்யங்கள் துக்க கீதங்களை இசைத்துக் கொண்டு ஊர்வலம் நகர்ந்தது. தியாகிகளின் இரதத்துக்குப் பின்னால், இருபதாயிரத்துக்கு மேற்பட்ட தொழிலாளர்கள் அணிவகுத்து அற்புதமான கட்டுப்பாடுடன் மௌனமாக வந்தார்கள். தியாகிகளின் இரதத்தின் முகப்பில் செங்கிற சார்ஜெண்ட் உடை தரித்த தொண்டர்படை தலைவர்கள் இருவர் நின்ற காட்சியும், செந்தொண்டர்கள் அடிமேல் அடியெடுத்து வைத்து நகர்ந்த காட்சியும் 'ராஜ மரியாதைபோல் இருந்தது போராட்டத்தில் காயம்பட்டோர் பலர் இரதத்தை இழுத்துவந்த காட்சியும் உருக்கமாக இருந்தது போக்குவரத்துகள் அனைத்தும் நிறுத்தப்பட்டன.

### கட்சியின் மாகாண கமிட்டியின் வீரவணக்கம்

ஊர்வலம் ஜனசக்தி ஆபீஸ் முன் வரும்போது, கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாகாணக் கமிட்டி அங்கத்தினர்கள் மணலி, வி. சுப்பையா, ரமணி, சீனிவாசராவ், சங்கரய்யா, மாணிக்கம், முத்தையா, பாலசுப்ரமண்யம், ஆர். எச். நாதன், என் கே கிருஷ்ணன், எம். ஆர் வெங்கட்ராமன் தலைமையில் நின்று வணக்கம் செலுத்தினார்கள்

ஊர்வலம் சைனாபஜார் முனைக்கு வந்து எத்திராஜ் ஊர்வலத்துக்காக தமாதித்து நின்றது.

### வீரத்தியாகி எத்திராஜ் ஊர்வலம்

வீரத் தியாகி எத்திராஜ் சவ ஊர்வலம், பெரம்பூரிலிருந்து, அலங்கரிக்கப்பட்ட காரில் வைக்கப்பட்டு வந்தது. கதவடைப்பினால் பாதிக்கப்பட்டிருக்கும் ஆயிரமாயிரம் பி அண்டு சி. மில் தொழிலாளிகளும், ஆயிரக்கணக்கான ரயில்வே தொழிலாளிகளும் துக்க கோலத்துடன், நூற்றுக்கணக்கான கொடிகளுடன் வந்தார்கள்.

தலைவர்கள் அந்தோணிப்பிள்ளை, சாமுண்டீஸ்வரன், பக்கிரிசாமி பிள்ளை, பலராமன், சி. கே. நாராயணன், கே. வி என். ராஜு, ஹரிபட், தபால் ஊழியர் தலைவர்கள் லெக்ஷ்மணன், ராமமூர்த்தி ஆகியோர் வந்தார்கள்.

### ஜன சமுத்திரமாயிற்று

ஹார்பர், பி அண்டு சி, ரயில்வே மூன்றும் ஒன்றுசேர்ந்து, அவர்களுடன் சிறுசிறு தொழிற்சாலைகளில் வேலை செய்பவர்களும், பேங்க், தபால், இன்ஷூரன்ஸ், பாரி கம்பெனி, கிராம்டன் இஞ்ஜினீயரிங், பெஸ்ட் அண்டு கம்பெனி பியர்ட்சல் போன்ற கம்பெனி ஊழியர்களுடன் பொதுமக்களும் சங்கமமானால், அந்த ஜனசமுத்திரத்தை நாலு நாலு பேராக அணிவகுத்துச் செல்லுவது சுலபமான காரியமா? ஆகவே பிராட்வே முனையிலிருந்து ஊர்வலம் வீதி முழுவதையும் அடைத்துக் கொண்டு செல்லலாயிற்று. இத்தகைய ஊர்வலம் ஹார்பர் மெயின் கேட்டுக்கு ஊர்வல முகப்பு போன பிற்பாடும்கூட ஜன வெள்ளத்தின் கடைசி முனையைக்காண முடியவில்லை.

மெயின் கேட் முனையில் தியாகிகளின் இரதங்கள் சிறிது நேரம் நிறுத்தப்பட்டன. கேட் முன் இரும்புத் தொப்பி போலீஸ் படை அணிவகுத்து நின்றது. உணர்ச்சி அலைகள் மேலோங்கின.

துறைமுகத்தின் மாடியில் வெகு தொலைவில் நின்று கொண்டிருந்த 40 50 கருங்காலிகள் இந்த ஜனசமுத்திர ஊர்வலத்தைப் பார்த்து குன்றிப் போயிருந்தார்கள்.

ஊர்வலம் சிறிது நகர்ந்தவுடன், திடீரென போலீஸ் படையினர் துப்பாக்கிகளைதோல்பட்டைக்குத் தூக்கி சட சட என்று அடித்தனர். இந்த இடத்தில்தான், இந்தப் போலீஸ்தான் துப்பாக்கிப் பிரயோகம் செய்த காரணத்தால், என்னமோ ஏதோ என்று ஒரு குழப்பம் ஏற்படத் தொடங்கிற்று. எதற்காக இந்த 'தடபுடா' என்று கேட்டதற்கு, சடலத்துக்கு மரியாதை செய்தார்களாம். இதை ஏ. எஸ். கேயிடமும், அந்தோணிப்பிள்ளையிடமும் சொல்லிருந்தால் அவர்கள் விஷயத்தை விளக்கியிருப்பார்கள். அப்படி அதிகாரிகள் செய்யாததால், திடுக்கிடத்தக்க அந்தக் குழப்பம் ஏற்பட்டது.

ஊர்வலம், எம். டிவிஷன் போலீஸ் ஸ்டேஷனை சமீபித்தது. தொழிலாளர்களையும், தொழிலாளர் தலைவர்களான தங்கசாமி, பொறைக்கலம் ஆகியோரையும் அடித்து சித்திரவதை செய்த சித்திரவதைக் கூடமல்லவா இது! அதனால் தொழிலாளிகளுக்கு உணர்ச்சியும் உத்வேகமும் பொங்கியது. உடனே அதிகாரிகள் ஏ. எஸ். கே யையும், அந்தோணிப் பிள்ளையையும் உதவிக்கு அழைத்தார்கள். அவர்களிருவரும் போலீஸ் வேன்மீது ஏறி நின்று ஊர்வலத்தினரை ஒழுங்குபடுத்தினார்கள். இரு தலைவர்களும் ஒன்றாக நிற்பதைக் கண்டு தொழிலாளிகள் கரகோஷம் செய்தார்கள்.

### வீரத் தியாகி நடராஜன்

ஊர்வலம் ஆட்டுத் தொட்டி முனை அடைந்தவுடன் வீரத் தியாகி நடராஜனின் பிரேத ஊர்வலம் வந்தது. எல்லா தியாகிகளின் ஊர்வலமும் சேர்ந்து இராயபுரம் வழியாகச் சென்று இரவு 9 மணிக்கு காசிமேடு மயானத்தில் முடிவுற்றது.

ஏ. எஸ். கே. அய்யங்கார் எழுந்து, அந்தோணிப் பிள்ளையைத் தலைமை தாங்குமாறு கேட்டுக்கொள்ள பொதுக்கூட்டம் ஆரம்பமாயிற்று. தோழர்கள் மோகன்குமாரமங்கலம், கே. டி. கே. தங்கமணி, பி. ராமமூர்த்தி, ஜி. லெக்ஷ்மணன், அப்பண்ண ராஜு ஏ. எஸ். கே. ஆகியோர் வணக்கம் செலுத்தி பேசிய பின், தியாகிகளின் திருநாமம் வாழ்க! தொழிலாளர் ஒற்றுமை ஓங்குக! என்ற கோஷங்களுக்கிடையே, செந்தொண்டர்கள் தியாகிகளின் சடலங்களை அடுத்தடுத்து அடக்கம் செய்தார்கள்.

## நடக்க இருப்பவை

### இ. எம். எஸ்.

சென்னை: 22-6-58 மாலை 4 மணிக்கு சென்னை மெமோரியல் ஹாலில் (சென்ட்ரல் ஸ்டேஷன் அருகில்) பெட்ரோலியம் தொழிலாளர் சங்கத்தை கேரள முதலமைச்சர் நம்பூதிரிப்பாட் துவக்கி வைப்பார். எஸ். குருசாமி (ரயில்வே சம்மேளனம்), டி. சி. என். மேனன் (எம். பி.), ஏ. எஸ். கே. அய்யங்கார், ஆர். வி கிருஷ்ணமூர்த்தி, இன்னும் இதர தொழிற் சங்கத் தலைவர்களும் பேசுவர்.

சென்னை: ஸ்டாக்ஹோம் ஆயுதப் பரிகரண - சர்வதேச ஒத்துழைப்பு மகாநாட்டை ஆதரிக்கும் சென்னை ராஜ்ய கன்வென்ஷன் கூட்டம் கோகலே ஹாலில் (2-வது நாள்) 22-6-58 காலை 8-30 மணிக்கு கூடும் திரு கே. எஸ். ராமசாமி சாஸ்திரி தலைமை வகிப்பார். திருவாளர்கள் ம. பொ. சி., பி. ராமமூர்த்தி, வி. பரமேஸ்வரன், எஸ். மனோகர் ஆகியோர் சொற்பொழிவாற்றுவர்.

•

### ஜீவா

நெல்லிக்குப்பம்: 22-6-58-ல் இங்கு நடைபெறும் முத்தமிழ் மன்ற ஆண்டு விழாவில் ஜனசக்தி ஆசிரியர் ப ஜீவானந்தம "சங்க இலக்கியமும், இன்றைய இலக்கியமும்" என்பதுபற்றி பேசுகிறார்.

22-6-58 ஞாயிறு மாலை 6 மணிக்கு
திருவல்லிக்கேணி கடற்கரையில்
இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி சென்னை கமிட்டி
ஆதரவில் நடைபெறும்
**மாபெரும் பொதுக்கூட்டத்தில்**
தோழர். எம். ஆர். வெங்கட்ராமன்
தலைமையில்
கேரள கம்யூனிஸ்ட் சர்க்கார் முதலமைச்சர்
**தோழர். ஈ. எம். எஸ். நம்பூதிரிபாட்**
பேசுவார்
அனைவரும் வருக! வருக! வருக!

ஜனசக்தி வாரமலர்

[21-6-1958]

# மக்கள் நலனா? காங்கிரஸ் நலனா?

சென்ற மாத இறுதி வாரத்தில் சமுதாய வளர்ச்சித் திட்ட மந்திரிகள், கமிஷனர்கள் ஆகியோரின் வருடாந்திர மகாநாடு மவுண்ட் அபுவில் நடந்தேறியது. இந்திய திட்டக் குழுவின் உப தலைவர் திரு. வி டி. கிருஷ்ணமாச்சாரி தலைமை வகித்தார். இந்த மகாநாடு முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ஏனெனில் 1952-ம் ஆண்டிலிருந்து அமுலில் உள்ள இந்தத் திட்டம் பாரதத்தின் இருதயமெனப்படும் கிராமாந்திரங்கள் மறுமலர்ச்சி பெற்று முன்னேற்றுவதற்குரியதெனக் கொள்ளப்படுகிறது. விவசாயம், கால்நடை, குடிசைத் தொழில், கூட்டுறவு முதலிய பல வேறு துறைகள் இத்திட்டத்துடன் பின்னிப் பிணைக்கப்பட்டுள்ளன. மேலும் ஆண்டுதோறும் கோடி கோடியாக இதில் செலவு செய்யப்படுகிறது. இதனுடைய அடிப்படை லட்சியம் என்ன என்பதை பிரதமர் பண்டித நேரு அபுமலை மகாநாட்டிற்கு அனுப்பிய வாழ்த்துச் செய்தியில் கூறுகிறார்:

### நேருவின் வாக்கு

"விரிவடைந்த இந்திய ஜனநாயகத்தின் சுயஅதிகாரம் பெற்ற ஜனநாயக கம்யூனிட்டுகளாக கிராமங்களை மலரச் செய்யும் வகையில் அரசியல், பொருளாதாரம், கலாசாரம் ஆகியவைகளின் வளர்ச்சிக்குரிய அஸ்திவாரத்தின் அடித்தளத்தை நிர்மாணிப்பதற்காக ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு பள்ளிக்கூடம், ஒரு பஞ்சாயத்து, ஒரு பல்நோக்குக் கூட்டுறவுக் கழகம் ஆகியவற்றை உருவாக்குவதே". எனக் குறிப்பிட்டு விளக்கியுள்ளார்.

இத்தகைய உயர்ந்த லட்சியங்களைக் கொண்ட இந்தத் திட்டம் வெற்றிகரமாக நிறைவேற்றப் படுவதில் இந்திய மக்கட் பகுதியினர் அனைவருக்கும் குறிப்பாக ஜனநாயக சக்திக்கு விசேஷ அக்கறை உண்டு.

### பதிமூன்றரைக் கோடி

இந்தத் துறைக்கென இந்திய சர்க்கார் இரண்டாவது 5 ஆண்டுத் திட்டத்தில் 200 கோடி ரூபாய் ஒதுக்கியுள்ளனர். இதில் நமது சென்னை ராஜ்யத்துக்கு 13.50 கோடி ரூபாயாகும்,

இவ்வளவு பெரிய அளவில் பொதுப்பணம் ஈடுபடுத்தப்படும் முக்கியத்துவமிக்க ஒரு துறையை நிர்வகிப்பாரின் மாநாடு அபுமலை மாநாடு. மேலும் கடந்த ஆறு ஆண்டு காலமாக இந்தத் திட்டம் செயல்பட்டு வந்ததன் அனுபவங்களை ஆராய்ந்து திட்ட வெற்றிக்குத் தனது சிபார்சுகளைச் சமர்ப்பிக்குமாறு வேண்டிக் கொள்ளப்பட்டிருந்த பல்வந்தராய் மேதா குழு தனது அறிக்கையைச் சமர்ப்பித்து விட்டது. இதனை சமுதாய நலத்திட்ட மத்தியக் குழுவும் (பிரதமர் நேருவைத் தலைவராகக் கொண்டது) ராஜ்யங்களின் முதலமைச்சர்களைக் கொண்ட தேசிய வளர்ச்சி திட்டக் குழுவும் பரிசீலனை செய்து ஏற்கனவே நடைமுறையில் இருந்த பல அம்சங்களை மாற்றி புதிய மாறுதல்களைக் கொண்டு வந்துள்ளனர்

உதாரணமாக, இனிமேல் ஏற்கனவே இருந்தது போன்று தேசிய வளர்ச்சி திட்டம் (NES) சமுதாய நலத்திட்டம் (CD) ஆகியவற்றுக்கிடையே வேறுபாடிருக்கமாட்டாது. ஆனால் பொதுவாக சமுதாயநலத் திட்டமெனப்படும். அத்திட்டம் இரு பகுதிகளாக ஒவ்வொன்றும் ஐந்து வருடங்கள் கொண்டதாக பிரிக்கப்படும். இதில் முதல் சட்டத்தில் ரூ. 12 லட்சமும் இரண்டாவது சட்டத்தில் ரூ 25 லட்சமும் செலவு செய்யப்படும். முன்பு திட்டமிட்டபடி தேசம் முழுமையும் 2-வது ஐந்தாண்டுத் திட்டகாலத்திற்குள் தேசம் முழுமையும் 2475 பிளாக்குகள் துவக்கப்படுவதற்குப் பதில் 900 பிளாக்குகளே துவக்கப்படும் என்பது போன்றவை.

எனவே. அபுமலை மகாநாடு குறைகளைப் போக்கி திட்டம் நிறைவேற வழிவகை வகுக்குமென ஆவலுடன் எதிர்பார்க்கப்பட்டது.

### ஏமாற்றம்

ஆனால் இந்த மகாநாடு வழக்கம்போல வெவ்வேறு பிரச்னைகளை ஆழமாக அலசி ஆராய்ந்ததே தவிர இதுவரை திட்டம் வெற்றிகரமாக்க நிறைவேருமல் இருந்த தடை கற்களை அகற்ற உருப்படியான ஆலோசனைகளை அளிக்கவில்லை என்பது மட்டுமல்ல, அவை புறக்கணிக்கப்பட்டுள்ளன என்பதைக் குறிப்பிடாமல் இருக்க முடியாது.

இதுவரை இத்திட்டம் பற்றி மத்திய மாகாண அரசுகளும், அமைச்சர்களும், அதிகாரிகளும் பொதுவாக ஒப்புக்கொண்டு வந்துள்ள ஒரு விஷயம், செலவான பணத்திற்கான பலன் கிடைக்கவில்லை. காரணம் பொது மக்கள் இதில் பங்கெடுத்துக் கொள்வதில்லை என்பதே. சமுதாய நலத் திட்டம் சம்பந்தப்பட்ட எந்தக் குழு அல்லது தனிப்பட்ட நபருடைய அறிக்கையிலும் இந்தப் பிரச்னை அடிச் சரடாக விளங்கி வந்துள்ளது. பலவந்த ராய் மேதாக் குழு அறிக்கையும் இதற்கு விதிவிலக்கல்ல. ஏனெனில் இந்தத் திட்டத்தின் மூலம் நிறைவேற்ற முற்படும் திட்டங்களில் மக்களும் தம் பங்குக்கென பாதித் தொகை செலுத்தியாக வேண்டும். (இது உழைப்பாகவும், ரொக்கமாகவும் இருக்கலாம்) சாதாரணமாக மக்கள் இதை ஏற்றுக் கொள்வதில்லை. பொது மக்களிடையே உற்சாகத்தை உண்டு பண்ணி அவர்களின் முன் முயற்சியை உருவாக்கி வளர்த்துச் செயலில் ஈடுபடும் திறனும் நம்பிக்கையும் கொண்ட பொதுஜன ஸ்தாபனங்களும் பிரதிநிதிகளும் இதில் தீவிரமாகப் பங்கு பெறுவதன் மூலம்தான் இது சாத்தியம். ஆனால் இதுகாறும் அவ்வாறு நடக்கவில்லை. மாருக பெரும்பாலும் காண்ட்ராக்டுக்காரர்கள் தான் இதுவரை வேட்டைக்காடாகப் பயன்படுத்திக் கொள்ளை லாபமடித்தனர். உதாரணமாக, ஹரிஜனங்களுக்கு வீடு கட்டும் திட்டத்தை எடுத்துக் கொள்வோம். ஒவ்வொரு வீட்டுக்கும் சர்க்காரின் மானியம் ரூ. 750/- வீடு கட்டிக் கொளபவர் ரூ. 200/- ஆக மொத்தம் ரூ. 950/- ஒரு வீடு கட்டுவதற்கு சர்க்காருடைய மதிப்பு. ஆனால் இதில் வீடு கட்டிக் கொள்பவர் ரூ. 250/- ரொக்கமோ உழைப்பு அல்லது சாதனங்களோ கொடுப்பதில்லை. அதற்குப் பதில் காண்ட்ராக்டுக்காரரிடம் மொத்தமாக காண்ட்ராக்டுக்கு விட்டு விடுவார்கள் இலாகா அதிகாரிகள். அவர் ரூ. 750/- மட்டும் சர்க்காரிடம் வாங்கிக்கொண்டு அவருக்குள்ள லாபம் போக பாக்கி மட்டும் வீடு கட்டிக் கொடுப்பார். கட்டிடம் ரூ 500-க்குள் தான் மதிப்பிருக்கும் இத்தகைய வீடுகள் எவ்வாறு நிலைக்கும்? சமீபத்தில் நமது ராஜ்ய முதலமைச்சர் காமராஜ் அவர்கள்கூட இந்த வீடுகள் ரூ 1000/- மதிப்பு இல்லையே என அங்கலாய்த்திருப்பது குறிப்பிடத்தக்கது. இதைப் போலவேதான் பல்வேறு திட்டங்களும்.

கடந்த ஆறு ஆண்டு காலமாக இவ்விதமாக பொதுப் பணம் பெருமளவில் விரயமாகியுள்ளது.

### வீண் பழி

இதுபற்றி அரசாங்கத்தைக் கேட்டால் "நாங்கள் என்ன செய்வோம்? பொது மக்கள் உற்சாகத்துடன் பங்கு கொள்வதில்லை. எதிர்க்கட்சிகள் சிரத்தை காண்பிப்பதில்லை. வெறும் குற்ற விமர்சனம்தான் செய்கின்றனர்". என பழி சுமத்துவதுடன் நின்றுவிடுகின்றனர். அபுமலை மாநாடும் இதற்கு மேல் போனதாகத் தெரியவில்லை.

தலைமை தாங்கிய வி. டி கிருஷ்ணமாச்சாரி அவர்கள் பேசும்போது, நமது லக்ஷியத்தை நிறைவேற்றும் வகையில் இயக்கத்தின் தலைமை கிராம, மாவட்ட மட்டங்களில்மக்களின் கைகளிலே நேரடியாக மாறிக்கொண்டிருக்கிறது, எனக் கூறி திருப்திப்பட்டுக் கொண்டுள்ளார்.

ஆனால், சமுதாய நலத் துறை அமைச்சர் எஸ். கே. டே அவர்களோ, "தங்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக் கொள்ள வேண்டுமென்பதில் மக்களின் இடையே உற்சாகம் நிலவுகிறது. ஆனால் அவர்களுடைய உற்சாகம் வேறு, முன்முயற்சிவேறு. மக்கள் நம்பிக்கையைப் பெற்ற ஸ்தாபனங்களில்லாமல் இந்த வேலை பூர்த்தியாகாது..." என்பதை ஏற்றுக் கொண்டுவிட்டு,

"படித்து அனுபவம் பெற்ற வாலிபர்கள் கிராமங்களை விட்டு, நகரங்களுக்குச் சென்றுவிடுகின்றனர். மககள பிரதிநிதிகள் வேறு வேலையில ஈடுபட்டுவிடுகின்றனர். பொதுஜன ஸ்தாபனங்கள் போதிய பலமுடையனவாக இல்லை. இதனால் சுயநல நோக்கமுடையவர்களும் ஜாதிய மனோபாவம் கொண்டவர்களுமே கிராமத் தலைவர்களாக விளங்குகின்றனர்" என்று கூறுகிருர்.

—(7-4-'58 ஹிந்து)

இவ்விதம் கோடிக்கணக்கான ரூபாய்களை அள்ளி இறைத்தும் தகுந்த பலன் விளையாமல் போனதற்கு சப்பைக்கட்டுக்கட்ட முயல்கிருர் சமுதாய நலத் துறை அமைச்சர்.

### யதார்த்தமல்ல

ஆனால் உணமைதான் என்ன? இன்று கிராமாந்தரங்களில் சேவையுள்ளமும், அறிவுத் திறனும் மக்கள் நம்பிக்கையையும் பெற்ற ஊழியர்களும், ஸ்தாபனங்களும் பூண்டற்றுப் போய்விடவில்லை எந்தக் காலத்திலும் இல்லாத அளவு உற்சாகத்தோடு கிராமப் புனருத்தாரணவேலைகளை தலையாய பணியாக்கிக் கொள்ள முன்வருவாரின் எண்ணிக்கை பெருகி வளர்ந்திருக்கிறது. இது சர்க்காருக்கு நன்கு தெரியும். இருந்தும் இத்தகைய நல்லெண்ணம் படைத்த திறமைசாலிகளின் பொது நலனை ஏற்று திட்டத்தை வெற்றியுடன் நிறைவேற்றி நாட்டை முன்னேற்ற அரசாங்கமும் காங்கிரஸ் ஆட்சியும் தயாராக இல்லை. குறுகிய கட்சி வெறி மனப்பான்மையுடன் காங்கிரஸ்காரர்கள் மூலம்தான் திட்டம் நிறைவேற்றப்பட வேண்டுமெனத் திட்டமிட்டு அவர்களிடம், மட்டுமே பொறுப்பை ஒப்படைக்கிறது அரசாங்கம். இதனால்தான் கிராமாந்தரங்களில் அதன் கண்ணுக்குச் சேவையாளர்கள் தென்படுவதில்லை. சுயநலமிகளும், ஜாதிய பித்து நிறைந்தவர்களுமே தென்படுகின்றனர். இவர்கள் தானே காங்கிரஸ்காரர்கள! இப்பொழுது புரிகிறதா? மந்திரி டே சொன்னதன் இரகசியம்?

### ஏனைய கட்சி மறுப்பு

இதை காங்கிரஸ் மந்திரிகள் வேகம் நிறைந்த குரலில் மறுக்கலாம். அனுபவரீதியான உண்மை அதுதான்; உதாரணமாக, 1957 அக்டோபரில் துவக்கப்பட்ட தேசிய வளர்ச்சித் திட்டத்தின் கல்லல் தொகுதிக்கு இன்னும் ஆலோசனைக் குழு நியமிக்கப்படவில்லை? விரைவில் நியமிக்கப் படவிருப்பதாகத் தெரிகிறது. தொகுதி முழுமைக்குமான நடைமுறை திட்டங்களை தயாரிக்கவும், நிறைவேற்றவும் அதிகாரம் படைத்த இந்தக் குழுவிற்கு இது வரை இத்தொகுதியில் வளர்ச்சி ஏற்பட வேலைகளில் ஜீவதொடர்பு கொண்டு புனருத்தாரண வேலைகளில் முன்னிற்போர் யாரும் நியமிக்கப்பட விருப்பதாகத் தெரியவில்லை உதாரணமாக கம்யூனிஸ்ட் கட்சியும், விவசாய சங்கமும் அதன் ஊழியர்களும், வளர்ச்சித்திட்ட வேலைகளில் முன்னணியில் நின்று வருகின்றனர்கள் என்பதும் இத்தொகுதி முழுமையும் அவர்கள் பரவி கிடக்கின்றனர்கள் என்பதும் அனைவரும் அறிந்த சாதாரண விஷயம். இதேபோல் குன்றக்குடி அடிகளார் அவர்கள். இருந்தும் இவர்களை யாரும் நியமிக்கப் படாமல் வளர்ச்சித்திட்ட வேலைகளில் எவ்வித அக்கறையும் காட்டாத புனருத்தாரண வேலைகள் பற்றி எவ்வித கருத்துமில்லாத நபர்களும் இந்தத் தொகுதியிலேயே வசிக்காத மதுரை மகாலெட்சுமி மில் முதலாளி திரு அழகுசுந்தரம் செட்டியார் போன்றோரும் நியமிக்கப்பட விருப்பதாக அறிகிறோம். இது உண்மையானல் சர்க்கார் போக்கு எத்தகையது என்பவை விளக்க வேண்டியதே இல்லை.

சமுதாய நலத் திட்ட வேலைகள் பற்றி பரிசிலனை செய்த பல்வந்த் ராய் மேத்தா குழு சர்வ கட்சியினரும் அடங்கிய ஒத்துழைப்புக் கமிட்டிகள் மூலம்தான் வெற்றி சாத்தியமெனக் கூறுகிறது எனினும், ஆட்சி வெறி பிடித்த மாகாண காங்கிரஸ் அரசாங்கங்கள் இதை ஏற்றுக் கொள்ள மறுக்கின்றன. ஆனால் அதே சமயத்தில் கேரளத்தில் சர்க்காரின் பல்வேறு குழுக்களில் தங்களுக்கு பிரதிநிதித்துவம் அளிக்கவில்லை. இந்த 'சர்வாதிகார' ஆட்சியினர் என்று கதறுவதில் தவறுவதில்லை இந்த ஜனநாயக மணிகள்.

இந்தப் போக்கு நீடிக்குமானல் நாட்டுக்குப் பெரும் தீங்காகும். எத்தனை கோடியைக் கொட்டிக் கொட்டி அளந்தாலும் விளைவு காண்ட்ராக்டு திமிங்கலங்களும், சுரண்டல் கழுகுகளும் பருத்துக் கொழுப்பதுதான். மக்களுக்கு கிடைப்பது பூஜ்யமே! இந்நிலையை உணர்ந்து மத்திய மாகாண அரசாங்கங்கள் உடனடியாக நியமன பிரச்னையில் தக்க நடவடிக்கை எடுத்து தவறுகளை நிவர்த்திக்க வேண்டும்.

ஜனநாயக சக்திகளைப் பொறுத்தவரை இந்தத் திட்டத்திலுள்ள பலன்களைப் பூரணமாக பயன்படுத்திக் கொள்ள முற்படும் போதே அவற்றின் குறைகளைப் போக்கவும் போராடவேண்டும். அதன்

(5-ம் பக்கம் பார்க்க)

### எழுந்து வாரீர்!

(ஈரோடு பாலகுரு)

அறிவுதந்த முடிவுதன்னை அணுவின்குண்டை
அறிவுஎன்ற ஒன்றில்லா அவர்கள் இன்று
அழிவுஎனும் நோய்வளர சோதிக்கின்ருர்!
அறிஞர்களே! இளைஞர்களே! ஒன்றுசேர்வீர்! (1)

விஞ்ஞானம் என்னும்ஒரு சக்தியாலே
விண்ணுலகை மண்பரப்பை மனிதர்தம்மை
அஞ்ஞானச் செயலாலே மாற்றுகின்ருர்!
அணுவழிவை உலகெல்லாம் சிந்துகின்ருர்! (2)

அணுகுண்டால் எல்லாமே அழியநேரும்
அழகான உருவங்கள் கோரம்ஆகும்!
அசைகின்ற விழிகள்கீழ் சுழன்றுவீழும்!
அரித்துஉடல் நிறம்மாறும் புண்கள்ஆகும்! (3)

பிறக்கின்ற உயிர்யாவும் பேதம்ஆகும்!
பெய்கின்ற மழைநீரில் விஷம்இருக்கும்!
கறக்கின்ற பசும்பாலைக் குடித்துவிட்டால்
கட்டாயம் குழந்தைகளும் கன்றும்சாகும்! (4)

கட்டியவன் காதலியைத் தேடிவந்தால்
கணவன்முகம் காண்பதற்குள் மனைவிசாவாள்!
வெட்டுக்குச் சாயாத மரங்கள்சாயும்!
விண்முட்டும் இமயமலை சாம்பல்ஆகும்! (5)

அறிவூட்டும் கலைகளெலாம் ஒழிந்துபோகும்!
ஆயகலைச் சிற்பங்கள் தூள்தூளாகும்!
வெறியூட்டும் இசைஇன்பம் ஓய்ந்துபோகும்!
வெள்ளம்போல் ரத்தம்தான் உறைந்துநிற்கும்! (6)

கொடுமைஇதை ஒழித்திடுவோம் எழுந்துவாரீர்!
கோணல்வழி செல்வோரைத் திருத்தவாரீர்!
குரங்குகளின் செயல்கள்இனித் தீர்ந்ததென்பீர்!
குண்டுகளின் ஓசைஇனி இல்லைஎன்பீர்! (7)

அழிக்கின்ற ஆயுதங்கள் அழிகஎன்பீர்!
அடங்காத போர்வெறியர் ஒழிகஎன்பீர்!
அணுகுண்டும் ஹைகுண்டும் தீய்கஎன்பீர்!
அன்பொன்றே மனிதர்களின் செல்வம்என்பீர்! (8)

அமைதிஎனச் சொல்கையிலே வெல்லம்என்பீர்!
அது இல்லை என்றிடிலோ சோகம்என்பீர்!
அமைதிஎன அகிலமெலாம் பாடவாரீர்!
அதற்காக உயிர்தருவோம் எழுந்துவாரீர்! (9)

# மனிதன்!

சுந்தர ராமசாமி

### முன்னுரை

இது கதையல்ல; நான் சிறுகதை விற்பன்னனுமல்ல. எனக்கு சிறு வயதிலிருந்தே ஒரு பழக்கம். இரவில் தலை சாய்த்து விட்டால் கனவுகள் தோன்ற ஆரம்பித்துவிடும். அண்மையில் கண்ட கனவொன்றை கூற முற்படுகின்றேன் (நான் தமிழ் பாஷை முறையாய் கற்றவனல்ல. ஏதோ கேள்வி ஞானம், தமிழும் மணிப் பிரவாளமும் பரவி வரும்; கற்றறிந்தோர் மன்னிக்க வேணும்.)

### கனவு

அன்று ஓர் உலகப் படத்தை வாங்கி வந்தேன். அடிக்கடி உலகப் படங்கள் வாங்கி வருவது என் பழக்கம். இரவு நேரத்தில் அதை மேசையில் பரப்பி மணிக்கணக்காய் கூர்ந்து பார்த்துக் கொண்டிருப்பேன். இது எனக்கு மனதுக்கு உகந்த பொழுது போக்கு. தேசா தேசங்களிலுள்ள நகரங்கள், பட்டணங்கள், ஊர்கள், சிற்றூர்கள், கிராமங்கள் எல்லாம் எனக்கு நண்பர்கள் மாதிரி. அந்த ஊர்களைப்பற்றி ரகசியமான கனவுகள் பல உண்டு. மனதில் எனக்கேற்றபடி உருவகப்படுத்தி வைத்துக் கொள்வேன். பாரிஸ்—ஜிமட்டு தாஸி, நியூயார்க்—சாமு மாமா இங்கு தான் குடியிருக்கிறார். மாஸ்கோ—கண்ணுட்டி ஸாஷா ஒரு அழகிய அறையில் உட்கார்ந்து கையுறை போட்டுக் கொண்டிருப்பாள். கால்கள் வெள்ளை வெளேரென்று இருக்கும். நெல்லை. கட்டபொம்மன் பாம்படம் போட்டுக் கொண்டு வில்லு அடிக்கிறான். இத்யாதி...

இரவில் தினசரி பத்திரிகைகளையும் புரட்டுவேன். ஒரே ஒரு விஷயத்தைத் தான் கூர்மையாகத் தேடுவேன். அதாவது இந்த பரந்த உலகத்தில் யார் யார் எங்கெல்லாம் இறந்து போயிருக்கிறார்கள் என்பதைப் பார்ப்பேன். வயோதிகத்தால் இறந்துபோனவர்களைப்பற்றி எனக்கு அக்கறை இடையாது. வயோதிகத்தால் இறந்து போவதும் செய்தியாகுமா? சண்டையால், கொள்கைப் பிணக்கால், ஜாதி மத உணர்ச்சிகளால், தடியடி, துப்பாக்கிப் பிரயோகம் அணுகுண்டு விஷகுண்டு, இன்னும் சில்லறை குண்டுகள் இவைகள் காரணமாக இறந்தோர் தொகையையும் அவர்கள் இறந்த ஊரையும் குறித்து வைத்துக் கொள்வேன். உலகப் படத்தை எடுத்து வைத்துக்கொண்டு எந்த எந்த ஊர்களில் உயிர்க்கொலை நடைபெற்றதோ அந்த அந்த ஊர்களில் குண்டூசியால் சிறு தொளைகள் போடுவேன். ஆயிரத்திற்கு மேற்பட்ட உயிர்கள் அழிந்திருந்தால், குண்டூசியைவிட்டு, ஆணியால் தொளைக்கப்படும் கவுரவத்தை அந்த ஊர் பெறும். இப்படி கவுரவிக்கப்பட்ட ஊர்கள் எத்தனையோ! எத்தனையோ!

மேற்படி கருமத்தை செவ்வனே செய்து வரும்பொழுது (கனவில் தான்) ஒரு சிக்கல் விளைந்தது.

ஸொக்கரா ஸொச்சோ என்று ஒரு ஊர். அங்கு ஆயிரத்தொருவர் இறந்தனர் என்று பத்திரிகைச்செய்தி வெளியாயிற்று. எப்படி இறந்தனர், ஏன் இறந்தனர் என்பதைப் பற்றி எனக்குக் கவலை கிடையாது. எனினும் உங்களுக்கு ஆவல் உந்தும் சொல்கின்றேன், கேளுங்கள்.

ஸொக்கரா ஸொச்சோவில் முன்னொரு காலத்தில் ஓர் அரசன் ஆட்சி புரிந்தான். அவன் நல்லாட்சி புரிந்து நன்மை தேடியவன். அந்நாட்டில் குடியாட்சி முறைக்கு அடிகோலியதும் அவனேயாம். அவனது பெருமையை சரித்திர ஆசிரியர்கள் பக்கம் பக்கமாக வரைகின்றார்கள். எனினும் மக்கள் அவன் மகிமையை உணர்ந்தனரோ என்பது ஐயமே. மேற்படி மன்னனின் மறைவு நாள் வந்தது. மக்கள் துக்க ஸாகரத்தில் மூழ்க வேண்டுமென்று அரசாங்கம் ஆணை பிறப்பித்தது. அன்றைய தினம் எல்லோரும் உண்ணா நோன்பு மேற்கொள்ள வேண்டுமென்று அவசரத் தீர்மானம் கொண்டு வந்து நிறைவேற்றிற்று. ஜனநாயக நாடானதால் அரசாங்கம் கொண்டு வரும் தீர்மானம் எதுவானாலும் நிறைவேறி விடுமே. எதிர்க் கட்சி அங்கத்தினர் மெய்யுருகப் பேசுவர்; ஆட்சிக் கட்சி அங்கத்தினர்களுக்கு எலும்பு உருகும். இருந்தாலும் கடைசியில் தீர்மானம் மட்டும் நிறைவேறி விடும். இதில் என்ன ஆச்சரியம்? இந்த சௌகரியத்தைப் பெற்ற பின்னர்தானே அக் கட்சியே அரியாசனம் ஏறுகின்றது. வளைய வளைய எதை எதையோ சொல்லிக்கொண்டு போகிறேன். மன்னியுங்கள்.

எனவே, அரசன் இறந்துபட்ட நாளில் உண்ணா நோன்பு மேற்கொள்ள வேண்டுமென்று அரசாங்கம் கொண்டுவந்த தீர்மானம் நிறைவேறிற்று.

அரசனின்நினைவுநாள் மாலையில் சோதனைப்படை ஊரைச் சுற்றிச் சுற்றி வந்தது. அரசாங்கத் தீர்மானத்தை யாராவது மீறியிருந்தால், கணமும் தயங்காது அவர்கள் கபாலத்தை பிளந்துவிட வேண்டுமென்பது அரசாங்கம் இட்ட ஆணை. சோதனைப் படைத் தலைமை அதிகாரி ஒவ்வொருவராய் பார்த்து சாப்பிட்டீரா? ஏன் உணவு அருந்தினீர்? உண்டதும் முறையோ ஆணையை அறியீரோ? என்றெல்லாம் கேட்டுக்கொண்டிருக்கவில்லை. அதற்குப் பொழுதுமில்லை எனவே பொதுவாக ஓர் உத்தரவு கொடுத்தார். "வயிறு வாடியிருந்தால் விடு, அல்லது சுடு" இதுதான் உத்தரவு.

எனவே ஆயிரத்தொருபேர் இறந்தனர்.

நான் உலகப் படத்தை விரித்தேன். ஆணியைக் கையில் எடுத்துக்கொண்டேன். ஸொக்கரா ஸொச்சரோ ஏற்கனவே குண்டூசியால் குத்தப்படும் கவுரவத்தைப் பெற்றிருந்தது. அது பெற்ற பேறுதான் என்னே! இன்று ஆணியில் குத்தப்படப் போகின்றது.

"நில்லுங்கள்!" என் மனைவி ஒரு தினசரித்தாளை பிடித்தபடி தலைவிரிகோலமாய் வந்தாள். "இதைப் பாருங்கள்" என்றாள். அவள் கையிலிருந்த பத்திரிகையைப் புரட்டினேன்.

ஸொக்கரா ஸொச்சோவில் இறந்தோர் தொகை தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது தானும்! சீ! என்ன இது?

"பார்த்தாயா, ஒரு நாடு பெற வேண்டிய அந்தஸ்தை ஒருவன் வாழ்ந்து கெடுக்கின்றான். எத்துணை அக்கிரமம்" என்றேன்.

மறுநாள் ஆவலுடன் பத்திரிகையைப் புரட்டினேன், ஏழெட்டு இடங்களில் குண்டூசியால் குத்துவதற்கும், இரண்டு இடங்களில் ஆணியால் குத்துவதற்கும் வகை இருந்தது. ஸொக்கரா ஸொச்சரோ சம்பந்தமான செய்தியைத் தேடினேன். இறந்தோர் தொகை இல்லை. மற்றோர் செய்தி இருந்தது.

"நேற்று இறந்தோரை மருத்துவ விடுதிக்கு தூக்கிச்சென்று டாக்டர்கள் வயிற்றைக் கிழித்துப் பார்த்ததில், எல்லோரும் உண்ணா நோன்பு மேற்கொண்டிருந்தனர் என்று தெரிந்தது. சோதனைப்படை, தவறுதலாய் வயிற்றில் கட்டி விழுந்தவர்களையும், கர்ப்பிணிகளையும், தொப்பையர்களையும் கொன்றுவிட்டது! அரசாங்கத் தலைவர் தனது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக்கொண்டார். இன்று ராஜ்யத்தில் எங்கும் கொடிகள் அரைக் கம்பத்திலேயே பறந்தன."

போனால் போகட்டும் என்று ஸெக்கரா ஸொச்சரோ சங்கதியை விட்டுத் தொலைத்தேன்.

இவ்விதமாய் நாள்தோறும், யான் தொளைகள் போட்டுவர, போட்டுவர, உலகப்படம் சல்லடை போலாயிற்று என்று கூறவும் வேண்டுமோ? எங்கும் ஊசி குத்த இடமில்லை. ஆனால் லொக்கரா மாக்கரோ என்ற தேசத்தில் மட்டும் ஒரு தொளைகூட விழவில்லையே என்று வியந்தேன். கலைக்களஞ்சியத்தைத் திருப்பிப் பார்த்தேன். பின்னர்தான் அந்த தேசத்தில் ஜனவாசமே கிடையாது என்பது தெரியவந்தது. ஜனவாசமே இல்லாத ஊரில் யாரும் இறந்து போகாததை எண்ணி எண்ணி வியந்தேன். தொடர்ந்து அங்கு அரசாங்கம் என்ற வஸ்துவும் இருக்க முடியாது என்று மூளையில் தட்டிற்று. லொக்கரா மாக்கரோவின் துரதிர்ஷ்டம் அப்படி!

ஏற்கனவே கைவசமிருந்த படம், தொளைகள் மயமாய் போய் விடவே தொடர்ந்து தொழிற்பட மற்றோர் உலகப்படம் வாங்கி வந்தேன். அன்று இரவு ஒரு கனவு (ஏற்கனவே கனவுதான் கண்டு கொண்டிருந்தேன் என்பது நினைவிருக்கிறதல்லவா?) கண்டேன்.

### கனவில் கண்ட கனவு

சாந்தி நெறிக் கழகம் சுமார் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தோன்றி, சீரும் சிறப்புமாய் நடைபெற்று வருகின்றது. அதன் தலைவர் திருவாளர் அன்பு நேசர் குமரிக் கண்டத்தில்தான் அது ஆரம்பிக்கப்பட்டது என்றும் சொல்கின்றார், அதற்கு சரித்திரச் சான்றுண்டா என்பது ஆராய்ச்சியாளர் கவனத்திற்குரியது. நமக்கென்ன அதைப் பற்றி?

சாந்தி நெறிக் கழகத்தில் அவ்வையார், ஒப்பன் ஹைமர், மாங்குடி மருதனார், ஆவுடையப்ப பிள்ளை, சின்ன சாஸ்திரி, கிங் காங், டப்ளியூ. ஓ. ஆல்பர்ட், பிராய்டு, திருவள்ளுவர், மறவாழி ஆகியோர் அங்கத்தினர். சுப்பு சங்கத்தின் வேலையாள்.

இடம், அன்பு நேசரின் இல்லம். அன்பு நேசருக்கு குழவிகள் யதேஷ்டமாய் உண்டு; கணக்கு வழக்கில்லை. எல்லாம் முற்றத்தில் துள்ளுகின்றன.

அவ்வை கீச்சுக் குரலில் பாடுகிறார். முன்னால் சிறு மைக் இருக்கிறது.

நாடா கொன்றோ, காடா கொன்றோ,
அவலா கொன்றோ, மிசையா
கொன்றோ,
எவ்வழி நல்லவர் ஆடவர்,
அவ்வழி நல்லை, வாழிய நிலனே.

மாங்குடி மருதனாரும், வள்ளுவரும் தாழம்பாயில் உட்கார்ந்து ரசித்துக் கொண்டிருந்தனர். ஆவுடையப்ப பிள்ளை சில்லறை எண்ணி ரசமாய் அட்டி போட்டுக் கொண்டிருக்கிறார். ஒப்பன் ஹைமர் சூட்சும தரிசி வழி எதையோ பார்த்துக் கொண்டிருக்கிறார். கிங்காங் ஒரு மூலையில் சட்டமாய் அமர்ந்து பலா பழங்களை உள்ளே தள்ளிக் கொண்டிருக்கிறார். சின்ன சாஸ்திரி கீதையிலிருந்து ஸ்லோகங்களை பாராயணம் பண்ணிக் கொண்டிருக்கிறார். யாராவது கவனிப்பது போல் தெரிந்தால் ஒரு ஆவர்த்தனம் அமிர்த வருஷமாய் பொழிந்து தள்ளலாம் என்ற ஆசையோடு அடிக்கடி தலைதூக்கிப் பார்த்துக் கொள்கிறார். பிராய்டு முற்றத்தில் விளையாடும் குழந்தைகளைப் பார்த்து, ஆண் குழந்தைகளுக்கு பெண் குழந்தைகளோடு விளையாடுவதில் தான் என்ன இன்பம், அதை உணராத பேதமை தான் என்ன என்று எண்ணி வியக்கின்றார். ஆல்பர்ட் ஒரு பொருளாதார நூலை ஆழ்ந்து கற்றுக் கொண்டிருக்கிறார். மறவாழி விடைத் தாள்களை அவசரமாய் திருத்திக் கொண்டிருக்கிறார், சுப்பு யாருக்கும் தெரியாமல் கொஞ்சம் அபினை உருட்டி வாயில் போட்டுக் கொள்கிறார். மறவாழி, (அவ்வையை நோக்கி) நீங்கள் பாடுகிறீர்களே, இந்தப் பாடலை வைத்துக்கொண்டு யான் ஒரு நூலே எழுதியுள்ளேன்.

அவ்வை—என்ன! நூலே இயற்றினீர்களா? அத்துணை பொருள் பொதிந்த பாடலா இது?

மறவாழி—எனக்கு இந்த நாலடிகள் கூட வேண்டாம். ஓரடி போதும், ஏன் ஓரெழுத்துக்கூடப் போதும். நேற்று "சிவம்" எனும் பொருள் பற்றிப் பேசினேன். பாதி பேசிக் கொண்டிருக்கும் பொழுது கோழி கூவிவிட்டது!

சுப்பு—கோழிக்குத் தமிழ் தெரிந்திருந்தால் நீர் பேச எழுந்ததுமே கூவியிருக்கும்.

(மூலையிலிருந்து 'ஐயோ' 'ஐயோ' என்ற குரல் இடிநாதம் போல் முழங்கிற்று. கிங்காங் வயிற்றைப் பிடித்துக்கொண்டு கீழே உருண்டு கொண்டிருந்தார்.)

கிங் காங்—ஐயோ! வயிற்று வலி தாங்க முடியவில்லையே.

(சுப்பு உள்ளே சென்று நாலைந்து பலாபழங்களை கொண்டு வந்து முன்னால் போடுகிறார். கிங் காங் மெதுவாக எழுந்து உட்கார்ந்து கொள்கிறார் தொடர்ந்து சாப்பிட ஆரம்பிக்கிறார். ஓசையும் அடங்கிற்று. மாங்குடி மருதனார். (மறவாழியைப் பார்த்து) அவ்வையின் பாடலுக்கு தாங்கள் கண்ட விளக்கத்தை சொல்கின்றீர்களா? அறிய ஆவல்.

மறவாழி—சோதிக்கின்றீர்களோ? யான் முறையாய் தமிழ் படித்தவன். M.O.L. பட்டம் பெற்றவன் தமிழில் அரிய ஆராய்ச்சி செய்து டாக்டர் பட்டமும் பெற்றுள்ளேன்.

கிங் காங்—தாங்கள் டாக்டரா? ஐயோ வயிற்றை வலிக்கிறதே! கொஞ்சம் மருந்து தாருங்களேன்.

திருவள்ளுவர்—M.O.L. என்றால் என்ன?

அவ்வை: டாக்டர் என்றால் என்ன?

சுப்பு: டாக்டர் என்றால்கூட என்ன என்று தெரியாதா? வெட்கம்! வெட்கம்!

மறவாழி: M.O.L, டாக்டர் என்பதெல்லாம் தமிழ் கல்விக்காகவும் ஆராய்ச்சிக்காகவும் கிடைக்கின்ற பட்டங்கள்.

மாங்குடி: தமிழ் கல்விக்காக பிற மொழி வார்த்தைகளில் பட்டங்கள்! விந்தைதான்.

அவ்வை: தங்கள் ஆராய்ச்சி கைவச முளதோ?

மறவாழி: உளது, உளது. டாக்டர் பட்டம் கிடைத்த பின்பு அதை நான் கீழே வைப்பதே இல்லை. (பையிலிருந்து ஒரு நூலை எடுத்து அவ்வையிடம் கொடுக்கிறார்).

சுப்பு: (அவ்வையை நோக்கி) நூலை தலைகீழாக வைத்துக் கொண்டிருக்கிறீர்கள். திருப்பி வைத்துக்கொள்ளுங்கள். (மெதுவாக) ஆங்கிலமறியா அறிவிலிகள்!

(நூலை அவ்வை அப்படியும் இப்படியும் திருப்பிப் பார்த்துவிட்டு மாங்குடி மருதனாரிடம் கொடுக்கிறார். மாங்குடி திரு திரு என்று விழிக்கின்றான். வள்ளுவர் வாங்கிப் பார்த்துவிட்டு முகத்தில் குறுநகை தோன்ற நூலை கீழே வைக்கின்றார்.)

அவ்வை: இதென்ன மொழி?

ஆவுடையப்ப பிள்ளை: இங்கிலீஷ் அம்மா இங்கிலீஷ்,

மழைக்காவது பள்ளிக்கூடத்தில் ஒதுங்கியிருந்தால் அல்லவா தெரியும். அதிலும் பெண்களாவது பள்ளிக்கூடத்திற்குப் போவதாவது. அதிலும் உங்கள் காலத்தில் பள்ளிக்கூடம் ஏது? அப்பொழுது வெள்ளைக்காரன் இந்தியாவிற்கு வரவில்லையே.

மறவாழி: இது ஆங்கில மொழி. உங்களுக்குத் தெரியாது. தெரிந்துகொள்ள வாய்ப்பும் இருந்ததில்லை என்று இலக்கிய வரலாறு கூறுகின்றது.

அவ்வை: தமிழ்ப்பற்றிய ஆராய்ச்சி ஆங்கிலத்தில்தான் எழுதுவீரோ?

(டப்ளியூ. ஓ. ஆல்பர்ட் கீழே கிடந்த நூலை எடுத்து உரக்கப் படித்தார். சிறிது நேரம் படித்துவிட்டு கீழே போடுகிறார்.)

ஆல்பர்ட்: படிக்க முடியும், ஆனால் ஒன்றும் விளங்கவில்லை.

மாங்குடி: எனக்கு படிக்க விருப்பம். படிக்க முடிந்தால் விளங்கும். படிக்க முடியவில்லை.

ஆவுடைப்பபிள்ளை: இந்த நூல் எத்துனை பிரதி விற்றது? கிறையத் துட்டு அடித்தீரோ? நான். மணிலாக்கொட்டை பயிர் சம்பந்தமாக நூல் எழுதி வைத்திருக்கிறேன் அது போட்டால் விற்குமோ?

சாந்தி நெறிக் கழகத் தலைவர் அன்பு நேசர் அவசர அவசரமாக உள்ளே நுழைந்தார். பின்னால் இரண்டு மூன்று குழந்தைகளும் நுழைகின்றன. எல்லோரும் எழுந்து நின்று வணக்கம் செலுத்துகிறார்கள். கிங்காங் எழுந்திருக்க முடியாததால் உட்கார்ந்தபடி கையைத் தூக்கிப் போடுகிறார்.

அன்பு நேசர் மேசையடியில் வந்து நின்று கொள்கிறார். டிராயரைத் திறந்து ஒரு பெட்டியை எடுக்கிறார். திறக்கிறார். மின்சார விசிறியைப் பொறுத்துகிறார். விசிறி சுழலச் சுழல அறையில் புயல் கிளம்புகிறது. பெட்டியிலிருந்து துண்டுத் தாள்கள் வெளியே கிளம்பி, நாலு திசையிலும் பறக்கிறது. அன்பு நேசர் கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாய் பிரவாகமெடுக்கிறது.

அன்பு நேசர்: அறிஞர்களே! நான் இக் கழகத்திற்கு தலைவராக வந்து இன்றோடு ஐம்பது ஆண்டுகள் நிறைவுறுகிறது. எனது முதல் கூட்டத்தில் நான் சொன்ன கருத்துக்கள் இன்றும் பசுமையாய் நினைவிலிருக்கின்றது. அன்று உங்கள் முன்னால் இதே பெட்டியைத் திறந்து, ஒரு புத்தம் புதிய உலகப் படத்தை எடுத்து துண்டு துண்டாகக் கிழித்தேன். "உலகம் துண்டாடிப்போய் விட்டது. மீண்டும் இதை இணைப்பது எப்படி? அறிஞர்களே அறிவுரை ஆற்றுங்கள்" என்று கேட்டுக் கொண்டேன். நீங்களும் எத்தனை எத்தனையோ கருத்துக்கள் சொன்னீர்கள். எனினும் இன்றும் உலகப்படம் துண்டுத் துண்டாய் பறக்கின்றது. என்ன செய்வேன்? ஏதுசெய்வேன்? (மேலும் கண்ணீர் உகுக்கிறார்.)

(ஒவ்வொருவராய் எழுந்து பேச ஆரம்பிக்கிறார்கள்.)

அவ்வை: நான் என் சார்பிலும், மருதனார் சார்பிலும், திருவள்ளுவர் சார்பிலும் பேசுகின்றேன். நாங்கள் சில கருத்துக்கள் கூறியுள்ளோம். அதை ஊன்றிப் படியுங்கள். எங்களைப்பற்றிப் பேசுவதை விட்டுவிட்டு எங்கள் கருத்தை மனதில் கொள்ளுங்கள். நாங்கள் சொன்னதை அறிந்துகொண்டால் மட்டும் போதாது; உணர்ந்துகொள்ள வேண்டும். நடைமுறை வாழ்க்கையில் பயன் பெறுதல் வேண்டும். இரண்டாயிரம் ஆண்டுகளுக்குப் பின்னால் ஏற்பட்டுள்ள சிற்சில விஷயங்களை நாங்கள் அறிந்தோமில்லை. ஆனால் இரண்டாயிரம் ஆண்டுகள் முன்னர் நடந்த பல விஷயங்களை நீங்கள் கவனியாது அசட்டை செய்கிறீர்கள்; சிந்தனை செய்து பாருங்கள்.

ஆவுடையப்ப பிள்ளை: யுத்தத்தினால் உலகம் பிளவுண்டது, அழிந்தது என்பதெல்லாம் அறியாமை. போன யுத்தத்தில் நான் லகாரம் லகாரமாய் ஈட்டினேன். அதற்கு முன்னர் கழுத்தளவு கடன் இருந்தது. யுத்தம் பீறிட்டதும் கடன் கழிந்தது, கோபுரம்போல் குவிந்தது. தான தர்மங்கள் செய்தேன். எங்களூரில் சிவன் கோயிலை பழுது பார்த்து, முகப்பு மாற்றி கும்பாபிஷேகம் செய்தேன், இதெல்லாம் யுத்தம் மூண்டு, மணிலாக் கொட்டையின் விலை எக்கச்சக்கமாய் ஏறினதால் ஏற்பட்ட நன்மைகள். ஒருநாள் திடீரென்று மணிலாக் கொட்டையில் விலை தடாலென்று சரிந்தது! எனவே அதை யொட்டித்தான் யுத்தமும் நின்றிருக்கும் என எண்ணுகிறேன். அதோடு சனியும் பிடித்தது! இன்று எங்கு பார்த்தாலும் பணமுடை பணமுடை. யுத்தம் ஓர் வரப்பிரசாதம். மணிலாக் கொட்டை விலை ஏறவேண்டும்! அதற்கு ஆவன செய்ய வேண்டும்.

சின்ன சாஸ்திரி: நமக்கேன் இந்தக் கவலை? பூலோகத்தில் தர்மத்தின் கை ஒடுங்கி அதர்மத்தின் கை ஓங்குகிறபொழுது நான் வருகிறேன் என்று பகவான்

(5-ம் பக்கம் பார்க்க)

# நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்

# 7-வது ஆண்டு நிறைவு விழா

## விசேஷ விற்பனை மாதம்! விலைகள் குறைக்கப்பட்டுள்ளன!

**நகரங்களில் ரூ. 100க்கு விற்பவர்களுக்கு ரூ. 5 பெறுமானமுள்ள பிரசுரங்கள் இனாம்!**

**கிராமப் பகுதிகளில் ரூ. 50க்கு விற்பவர்களுக்கு ரூ. $2\frac{1}{2}$ பெறுமானமுள்ள பிரசுரங்கள் இனாம்!**

## அரிய சந்தர்ப்பம்! பயன்படுத்த தவறாதீர்!

அன்புமிக்க ஆதரவாளர்களே,

எங்களுடைய ஸ்தாபனம் ஆரம்பிக்கப்பட்டு 7 ஆண்டுகள் முடிவடைகின்றன. இந்தக் காலகட்டத்தில் மிகுந்த பணிவுடன் மக்களுக்கு சேவை செய்து வந்துள்ளோம். எங்கள் பணியில் உங்களுடைய உள்ளன்பு மிக்க ஒத்துழைப்பும், ஆதரவும் இருந்து வந்துள்ளது. எங்களுடைய ஸ்தாபனம் ஏற்பட்டு 7 ஆண்டுகள் நிறைவு பெறும் இந்தச் சந்தர்ப்பத்தில் உங்களுடைய ஆதரவுக்கு எங்கள் மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

இந்தச் சந்தர்ப்பத்தில் கீழ்வரும் விசேஷ சலுகைகளை உங்களுக்கு அளிக்க முன் வந்துள்ளோம். இந்தச் சலுகைகள் 1958 ஜூலை முதல் தேதியிலிருந்து ஜூலை 31 வரை வழங்கப்படும். இந்த அரிய வாய்ப்பை முழுக்க முழுக்க பயன்படுத்திக் கொள்ளும்படி வேண்டுகிறோம்.

விசேஷ மலிவு விலைகளில் அளிக்கப்படும் பிரசுர செட்டுகளை அனைவரும் வாங்கி எங்களுக்கு ஆதரவு தரும்படி கேட்டுக்கொள்கிறோம்.

ருஷ்ய நவீனங்கள், விஞ்ஞான நூல்கள், சிறுவர் இலக்கியங்கள், அரசியல், தத்துவ நூல்கள், உலக இலக்கிய மேதைகளின் வாழ்க்கைச் சரித்திரங்கள், சோவியத் யூனியனின் பலதுறை வளர்ச்சிகள் சம்பந்தப்பட்ட பிரசுரங்கள், சீனாவைப்பற்றிய பிரசுரங்கள் முதலிய ஆங்கில வெளியீடுகளும், அதுபோலவே தமிழில் வெளிவந்துள்ள வெளியீடுகளும் மலிவு விலைகளில் உங்களுக்கு வழங்கப்படுகின்றன.

ஏஜெண்டுகளுக்கு ஒவ்வொரு செட்டுக்கும் 25 சதவீதம் கமிஷன் தரப்படும்.

ஏஜெண்டுகள் விசேஷ முயற்சி எடுத்துக்கொண்டு இந்த விற்பனை இயக்கம் வெற்றிகரமாக நடைபெறுவதற்கு உதவும்படிக் கேட்டுக்கொள்ளுகிறோம்.

வணக்கம்,
நிர்வாகிகள்,
**நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்.**

## ஆங்கில நூல்கள்

### Books on Soviet Science

**SET No. 1**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| Travel to Distant Worlds | —by Karl Gilzin ... | 2-25 | |
| Cancer | —V. I. Kazansky ... | 0-37 | |
| Land in Bloom | —V. Safonov ... | 2-25 | |
| Scientific Session on the Physiological Teachings of Academician Povlov | ... | 0-37 | |
| New Method of Soil and Crop cultivation | —by T. S. Maltscv ... | 0-25 | |
| Cruising in the ANTRACTIC | ... | 0-25 | |
| | | 5-75 | 4-25 |

### Biographies of Scientists

**SET NO. 2**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| Kanstantin Tsiolkovsky | —By A. Kosmodsmyansky ... | 0-62 | |
| My Path in Science | —V. Filatov ... | 1-25 | |
| Klement Arkadyevich Timiryazev | —G Platonov ... | 1-31 | |
| Life Triumphs | —A. Sharav ... | 1-31 | |
| | | 4-30 | 3-25 |

### Russian Classics

**SET NO. 3**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| Short Stories | —By Leo Tolstoy ... | 2-50 | |
| Tales of Sevastopol | ,, ... | 2-25 | |
| Same Old Story | —Ivan Goncharov ... | 2 81 | |
| | | 7-56 | 5-00 |

**SET NO. 4**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| Insulted and Humiliated | —F. Dostoyevsky ... | 3-37 | |
| Tales from M. Saltykov Schedrin | ... | 1-37 | |
| Five Plays | —M. Gorky ... | 2-56 | |
| Mumu | —I. Turgenev ... | 0-31 | |
| | | 7-61 | 5-50 |

**SET NO. 5**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| Rudin | —Turgenev ... | 1-87 | |
| Hunter's Sketches | ,, ... | 2-81 | |
| Evenings Near The Village of Dikanka | —By N. Gogol... | 2-25 | |
| Dubrovosky | —Pushkin ... | 0-56 | |
| | | 7-49 | 5-00 |

### Modern Novels

**SET NO. 6**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| Virgin Soil Upturned | —Mikhail Sholokov ... | 3-00 | |
| Pioneers of Freedom | —Olgaforsh ... | 2-62 | |
| Guarantee of Peace | ... | 1-69 | |
| | | 7-31 | 6-00 |

**SET NO. 7**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| Foma Gordeyev | —M. Gorky ... | 2-62 | |
| Heart of A Friend | —E. Kazakevich ... | 1-50 | |
| Spring on The Oder | ,, ... | 2-62 | |
| Looking Ahead | —Vera Panova ... | 1-87 | |
| | | 8-61 | 6-00 |

**SET NO 8**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| Living Water | —A. Kozhenikov ... | 2-50 | |
| Story about a Real Man | —S. Polevoi ... | 2-62 | |
| Those Who Seek | —D. Granin ... | 2-75 | |
| | | 7-87 | 5 50 |

**SET NO 9.**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| Ordeal (in 3 Vol.) | —A. Tolstoy ... | 6-75 | |
| The Zhurbins | —Vsevolod Kochetov ... | 2-25 | |
| | | 9-00 | 6 50 |

### Books for Young People

**SET No. 10**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| Malachite Casket | —P. Bazhov ... | 3-75 | |
| Rook Herald of Spring | —S. Mstislsvsky ... | 1-94 | |
| The Little Humpbacked Horse | —P. Yershow ... | 2-06 | |
| | | 7-75 | 5-25 |

**SET No. 11**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| Do You Know | —M. Ilyin, E. Segal ... | 2-50 | |
| A White Sail Gleams | —Valentin Katayev ... | 3-75 | |
| | | 6-25 | 5-00 |

**SET No. 12**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| Scholboys | —Nosov ... | 1-19 | |
| The Dirk | —Anatoly Rybakov ... | 2 12 | |
| Twelve Months | —S. Marshak .. | 0-75 | |
| | | 4-06 | 3-00 |

**SET No. 13**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| The Old Fortress | —Vladimir Katayev ... | 4-37 | |
| Nikita's Childhood | —A. Tolstoy ... | 1-12 | |
| | | 5 49 | 4-30 |

### Politics and Philosophy

**SET No. 14**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| Lenin Selected Works | in 2 Vol. (4 Parts) ... | 7-50 | 5-00 |

**SET No. 15**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| The Development of Capitalism in Russia | —Lenin ... | 2-62 | |
| Materialism and Empirio Criticism | —Lenin ... | 1-87 | |
| The Development of Monist View of History | —G. Plekhanov ... | 1-31 | |
| | | 5-80 | 4-25 |

**SET No. 16**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| Marx and Engels On Religion | ... | 1-19 | |
| Marx and Engels—The Holy Family or The Critique of Critical Critique | ... | 1-62 | |
| Marx and Engels—Selected Correspondence | ... | 1-87 | |
| Marx and Engels On Britain | ... | 2-25 | |
| | | 6-93 | 4 75 |

**SET No. 17**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| J. V. Stalin's Complete Works Vol. 2-13 | ... | 16-50 | 10-00 |

**SET No. 18**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| Marx, Engels and Lenin Pamphlets 25 Books in a set | ... | 1-50 | 0-75 |

**SET No. 19**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| J. V. Stalin's Pamplets 26 Books in a eet | ... | 2-06 | 1-00 |

**SET No. 20**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| 20th Party Congress of The CPSU a Set of 11 Books | ... | 1-25 | 0-65 |

### Autobiographies and Life Sketches

**SET No 21**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| Yasnaya Polyana—Leo Tolstoy's Home | ... | 0-44 | |
| Evgeny Paton Reminiscences | ... | 1-19 | |
| Tolstoy's Moscow Home | ... | 0-50 | |
| Recollections of Ivan Vasilovich Babushkin | ... | 0-75 | |
| Nikolai Ostrovsky—Hail! Life! | ... | 1-12 | |
| A. P. Chekov | —Vladimir Yermilov ... | 2-62 | |
| | | 6-62 | 5-00 |

### Writers from the English World

**SET No 22**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| Mary Barton | —By Elizabeth Gaskell ... | 2-75 | |
| No witchcraft for Sale | —Doris Lessing ... | 2-00 | |
| The Roaring Nineties | —Catherine Susannah ... | 3-69 | |
| | | 8-44 | 6-00 |

### Book on Soviet Union

**SET No. 23**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| Social and State Structure of U.S.S.R | —Karpinsky ... | 0-56 | |
| Soviet Lativia | ... | 0-75 | |
| History of The Communist Party of Soviet Union (Bolshaviks) | ... | 1-12 | |
| The Economic Geography of U S S.R. | ... | 3-00 | |
| | | 5-43 | 4-00 |

**SET No. 24**

| Title | Author | Price | Reduc. Price |
|---|---|---|---|
| The Black Sea Steppe | M. Posmitmy ... | 0-31 | |
| Great Construction Works of Communism and the Remaking of Nature | ... | 0-19 | |
| People at The Karavoyevo State Farm | —V. Lebedev ... | 0-25 | |
| Labour Protection at the Soviet Industrial enterprises | ... | 0-19 | |
| Our Colleetive Farm | —P. Azirkov ... | 0-62 | |
| Karaganda | ... | 0-12 | |
| Social Insurance In U.S.S.R. | ... | 0-19 | |
| People Regenerated | ... | 0-12 | |
| Odessa Dockers | ... | 0-12 | |
| Trade Union Health Resorts | ... | 0-19 | |
| Health Resort for The Working People | ... | 0-19 | |
| Our Kolkhoz | ... | 0-06 | |
| In The Virgin Lands | —S. Fridland ... | 0-19 | |
| | | 2-74 | 1-25 |

**SET No. 25**

| | | Price | Reduc. Price |
|---|---|---|---|
| A set of 28 Books on Soviet Women and The Land of Soviets | | 2-63 | 1-75 |

## Books on Art

**SET No. 26**

| | | | |
|---|---|---|---|
| My Profession | —Sergei Oberaztsov | 3-75 | |
| Galina Ulanova—The Making of a Bellerina (22 Illustrations) | | 1-25 | |
| Notes of A Soviet Actor | —Cherkasov | 3-00 | |
| | | 8-00 | 6-00 |

**SET No. 27**

| | | | |
|---|---|---|---|
| The Russian Museum | —A Short Guide | 1-00 | |
| The Hermitage Museum | ,, | 1-25 | |
| The Tretyakov Gallery | —A Short Guide (56 Productions) | 1-00 | |
| Ilya Repin | —D Sarakyanov | 2-00 | |
| Indian Sketches | —Girasimov | 2-25 | |
| | | 7-50 | 5-50 |

**SET No. 28**

| | | | |
|---|---|---|---|
| V. I. Lenin's Life In Pictures | —(27 Pictures) | 1-75 | |
| N. A, Bulganin & N. S. Khrushchev In India (Album) | | 1-50 | |
| | | 3-25 | 2-50 |

## CHINA

### Books on Chine

**SET No. 29**

| | | | |
|---|---|---|---|
| Man Against Flood | —Revi Alley | 1-25 | |
| From Opium War to Liberation | —Israel Epstein | 0-62 | |
| New China Advances to Socialism | | 0-75 | |
| Hand Book On People's China | | 2-40 | |
| From Yenan to Peking | | 1-00 | |
| Yo Bonfa ! | —Revi Alley | 1-00 | |
| The People Have Strength | —Revi Alley | 1-62 | |
| | | 3-12 | 5-50 |

**SET No. 30**

| | | | |
|---|---|---|---|
| Dawn On The River and The Other Stories | | 2-20 | |
| Children of The Dawn | —Revi Alley | 3-25 | |
| Racing towards Victory | | 0-50 | |
| Spring Silk Worms and Other Stories | —Mao Tun | 2-19 | |
| | | 8-14 | 6-00 |

### Novels

**SET No. 81**

| | | | |
|---|---|---|---|
| Builders of Anshan | | 0-75 | |
| Wall of Bronze | —Liu Ching | 1-12 | |
| Son of The Working Class | —Wo Un-To | 1-62 | |
| The Hurricane | —Chou Li Po | 2-25 | |
| | | 5-74 | 4-00 |

### Children's Books

**SET No. 32**

| | | | |
|---|---|---|---|
| Selections From Feng Tse-Kais Drawings of Children | | 2-25 | |
| Children's Drawings From China | | 0-87 | |
| Folk Tales From China | | 2-00 | |
| | | 5-12 | 3-75 |

### Chinese Plays

**SET No. 33**

| | | | |
|---|---|---|---|
| Women's Representative (3 One Act Plays) | | 1-00 | |
| Steeled In Battles | | 0-62 | |
| The Palace of Eternal Youth | —Hang Sheng | 3-00 | |
| Dragon Beard Ditch Lao Shali | | 1-00 | |
| | | 5-62 | 4 00 |

### Pictorials

**SET No. 34**

| | | | |
|---|---|---|---|
| Happy Youth of China | | 1-12 | |
| Buddhists In New China | | 3-50 | |
| Religious Life of Chinese Muslims | | 1-37 | |
| | | 5-99 | 4-00 |

**SET No. 35**

| | | | |
|---|---|---|---|
| Peking to-day and Yesterday | | 1-62 | |
| Water Conservancy In New China | | 3-00 | |
| First Five Year Plan For Development of National Economy of the People's Republic of China (Illustrated). | | 0-87 | |
| | | 5-49 | 3 75 |

### Chinese Five Year Plan

**SET No. 36**

| | | | |
|---|---|---|---|
| Report on the Multiple Purpose Plan for Permanantly Controlling the Yellow River and Exploiting its Water Resources | | 0-62 | |
| First Five Year Plan for Development of the National Economy of the People's Republic of China | | 1-25 | |
| Report on the First Five Year Plan for Development of the National Economy of the People's Republic of China in 1953-57 | Li-Fu-Chun | 1-00 | |
| Documents of the First Session of The First National People's Congress of the People's Republic of China | | 1-50 | |
| | | 4-37 | 3-00 |

**SET No. 37**

| | | | |
|---|---|---|---|
| Mao Tse Tung's Pamphlets 24 Books in a Set | | 4-50 | [illegible] |

# தமிழ்

## தத்துவார்த்த நூல்கள்

**செட் நெ. 1**

| | | | |
|---|---|---|---|
| கூலி உழைப்பும் மூலதனமும் | —காரல் மார்க்ஸ் | 0-75 | |
| கம்யூனிஸ்ட் அறிக்கை | —மார்க்ஸ்-எங்கல்ஸ் | 1-00 | |
| இடதுசாரி கம்யூனிஸம் | —லெனின் | 1-50 | |
| அரசாங்கமும் புரட்சியும் | —லெனின் | 1-50 | |
| அராஜக வாதமா சோஷலிஸமா | —ஸ்டாலின் | 0-75 | |
| | | 5-50 | 4-00 |

**செட் நெ. 2**

| | | | |
|---|---|---|---|
| மதத்தைப்பற்றி | —லெனின் | 0-75 | |
| லெனினிஸத்தின் அடிப்படை அம்சங்கள் | —ஸ்டாலின் | 1-50 | |
| முரண்பாட்டைப்பற்றி | — மா சே-துங் | 0-44 | |
| இயக்க இயல் பொருள் முதல் வாதமும் சரித்திர இயல் பொருள் முதல் வாதமும் | —ஸ்டாலின் | 0-50 | |
| கிராம ஏழை மக்களுக்கு | —லெனின் | 0-75 | |
| தேசிய இனப் பிரச்னை-சில விமர்சனக் குறிப்புகள் | —லெனின் | 0-62 | |
| மார்க்ஸிஸமும் தேசிய இனப் பிரச்னையும் | —ஸ்டாலின் | 0-62 | |
| | | 5-18 | 3-75 |

## நவசீனத்தைப் பற்றிய நூல்கள்

**செட் நெ. 3**

| | | | Reduc. Price |
|---|---|---|---|
| சீனப் புரட்சியும் சீனக் கம்யூனிஸ்ட் கட்சியும் | —மா சே-துங் | 0-37 | |
| கம்யூனிஸ்ட் கட்சியைப்பற்றி | —லியோ ஷோசி | 1-25 | |
| உட்கட்சிப் போராட்டம் (லியோ ஷோசி) | | 1-00 | |
| சீனத்தின் விவசாயச் சீர்திருத்தம் | | 0-75 | |
| சீனத் திருமணச் சட்டம் | | 0-37 | |
| | | 3-74 | 2-25 |

## இதர வெளியீடுகள்

**செட் நெ. 4**

| | | | |
|---|---|---|---|
| பண்டைக்கால இந்தியா | —எஸ். ஏ. டாங்கே | 3-00 | |
| வீர நினைவுகள் | —ஜூலியஸ் பூசிக் | 1-25 | |
| மா சே துங் பாலியமும் வாலிபமும் | —எமிசியோ | 0-75 | |
| பாரதி பாடல்கள் | —ஜீவா முன்னுரையுடன் | 1-00 | |
| | | 6- 0 | 4-00 |

**செட் நெ. 5**

| | | | |
|---|---|---|---|
| அமெரிக்காவிலே | | 1-50 | |
| மாபெரும் சதி | | 1-50 | |
| யுத்தம் வேண்டாம் | | 1-00 | |
| | | 4-00 | 3-00 |

**செட் நெ. 6**

| | | | |
|---|---|---|---|
| பொது உடைமைதான் என்ன ? | | 1-25 | |
| தூக்கு மேடைக் குறிப்பு | | 1-25 | |
| மக்கள் ஜனநாயகம் | | 0-75 | |
| | | 3-25 | 2-50 |

**செட் நெ. 7**

| | | | |
|---|---|---|---|
| பணம் | | 1-00 | |
| கூண்டுக் கிளி | | 1-00 | |
| எரிமலை | | 5-00 | |
| | | 7-00 | 4-00 |

**செட் நெ. 8**

| | | | |
|---|---|---|---|
| ரத்தக்களரி | | 1-00 | |
| லெனின் பிறந்தார் | | 3-75 | |
| மகாகவி பாரதியார் | —வ. ரா. | 2-00 | |
| | | 6-75 | 5-00 |

**செட் நெ. 9**

| | | | |
|---|---|---|---|
| பாரதியார் சரித்திரம் | —செல்லம்மா பாரதி | 2-00 | |
| கம்பன் என் காதலன் | | 1-00 | |
| திரிவேணி | | 1-00 | |
| யாத்திரை | | 1-00 | |
| முத்திரைக் கணையாழி | | 1-00 | |
| | | 6-00 | 4-50 |

**செட் நெ. 10**

| | | | |
|---|---|---|---|
| செல்வம் | | 1-00 | |
| ராஜ்யம் | | 1-00 | |
| ரோஜாப் பூ | | 1-00 | |
| காவியக் காதல் | | 1-00 | |
| இரண்டு பெண்கள் | | 1-00 | |
| ஜீவப் பிரவாகம் | | 1-00 | |
| | | 6-00 | 4-60 |

**செட் நெ. 11**

| | | | |
|---|---|---|---|
| அறிஞர் மார்க்ஸ் | | 1-50 | |
| அமெரிக்கக் கதைகள் | | 1-00 | |
| புறநானூறும் தமிழரும் | | 1-00 | |
| சிவப்புக் குதிரைக் குட்டி | | 1-00 | |
| தர்ம ரட்சகன் | | 1-00 | |
| | | 5-50 | 4-20 |

## கம்யூனிஸ்ட் கட்சி வெளியீடுகள்

| | | ரு | அ. | பை. |
|---|---|---|---|---|
| உழவர் பெருமக்களும் நாமும் | —பி. சீனிவாச ராவ் | 0 | 4 | 0 |
| வீர பரம்பரை | —கே. முத்தையா | 0 | 4 | 0 |
| இரண்டாவது பொதுத் தேர்தல் | —மத்யக் கமிட்டி பரிசிலனை | 0 | 4 | 0 |
| கம்யூனிஸ்ட் அறைகூவல் | —மத்யக் கமிட்டித் தீர்மானம் | 0 | 3 | 0 |
| மார்க்ஸீய சித்தாந்தம் | —வி. பி. சிந்தன் | 0 | 2 | 0 |
| கம்யூனிஸத்தின் வெற்றி முரசு | —சர்வதேச கம்யூனிஸ்ட் தலைவர் பிரகடனம் | 0 | 3 | 0 |
| சர்வதேச நிலைமை | —என். சங்கரய்யா | 0 | 2 | 0 |
| மக்களிடையே உள்ள முரண்பாடுகள் | —மா சே-துங் | 1 | 10 | 0 |
| ஹோ சி-மின் | —மாஜினி | 0 | 4 | 0 |
| அண்ணாத்துரையின் அவதூறுக்குப் பதில் | —எம். கல்யாணசுந்தரம் | 0 | 3 | 0 |
| ஜனநாயக மொழிக் கொள்கை | —அஜய்கோஷ் | 0 | 3 | 0 |
| தற்கால அரசியல் நிலைமை | —அமிர்தசரஸ் காங்கிரஸ் தீர்மானம் | 0 | 3 | 0 |
| காங்கிரஸும் கம்யூனிஸ்ட் கட்சியும் | —என். சங்கரய்யா | 0 | 2 | 0 |
| வடநாடு வாழ தென்னாடு தேய்கிறதா ? | —எஸ். ராமகிருஷ்ணன் | 0 | 2 | 0 |
| பார்லிமெண்டில் கம்யூனிஸ்டுகள் | —ஏ. கே. கோபாலன், ஹிரேன் முகர்ஜி | 0 | 3 | 0 |
| இந்திய விவசாயம் : கம்யூனிஸ்ட் திட்டம் | —என். பிரசாத ராவ் | 0 | 2 | 0 |
| அஜய்-ஜெயப்பிரகாஷ் கடிதங்கள் | | 0 | 3 | 0 |
| சட்ட சபையிலே கம்யூனிஸ்ட் கட்சி | —கே. முத்தையா | 0 | 2 | 0 |
| காலனி ஆதிக்கத்தின் வீழ்ச்சி | —S. A. டாங்கே | 0 | 6 | 0 |

குறிப்பு :—கம்யூனிஸ்ட் கட்சி, சக்தி காரியாலய வெளியீடுகளுக்கு மட்டும் 20% கமிஷன் தரப்படும்.

## ஏஜெண்டுகளுக்கும் விற்பனையாளர்களுக்கும் நிபந்தனைகள்

ஒவ்வொரு செட்டுக்கும் கமிஷன் 25/ சதம்.

ஆங்கிலப் பிரசுரங்கள் விஷயத்தில் மொத்த ஆர்டர் ரூ. 150-க்கு அதிகரித்தால் 33⅓ சதம் கமிஷன் தரப்படும்.

எல்லா ஆர்டர்களுக்கும் தபால், ரயில் கட்டணங்கள் பிரத்யேகம்.

எல்லா ஆர்டர்களும் ரொக்கத்திற்கே ஏற்றுக்கொள்ளப்படும். வி பி. மூலம் பெற விரும்புபவர்கள் குறைந்தபட்சம் மொத்த ஆர்டர் தொகையின் 25 சத பணத்தை முன்பணமாக அனுப்பி வைக்க வேண்டும்.

**இதரர்களுக்கு :**

தனிப்பட்ட ஆர்டர்களுக்கு கமிஷன் தரப்பட மாட்டாது. தபால் கட்டணம் பிரத்தியேகம். வி. பி. பியினால் ஏற்படும் அதிகச் செலவைத் தவிர்ப்பதற்காக முன் பணம் அனுப்பும்படிக் கேட்டு கொள்ளுகிறோம்.

**கிடைக்குமிடம் :**

**1. நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,**
9, பாலமுத்துத் தெரு, மவுண்ட் ரோட், சென்னை-2.

**2. நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,**
10, மேலக் கோபுர வாசல், மதுரை.

**3. எஸ். எம். ஆர். மாணிக்கம்,**
1, செர்ரி ரோடு, சேலம்-1.

# நவ கேரள சர்க்காரைப் பாரீர்!

சோவியத் யூனியனையும் அதனைச்சார்ந்த பல சோஷலிசக் குடியரசுகளையும் தவிர இந்தியா உட்பட உலகில் எல்லா நாடுகளிலுமே குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டம் பற்றியும், கர்ப்பத் தடை பற்றியும் பிரச்சாரம் செய்யப்படுகிறது. உலகில் பெருகி வரும் மக்கட் தொகையைக் கண்டு முதலாளித்துவப் பொருளாதார நிபுணர்கள் "அபாயச் சங்கு" ஊதுகிறார்கள். இன்றுள்ள பொருளாதார ஏற்றத்தாழ்வும், அதன் அடிப்படையில் முளைக்கின்ற வேறு பல ஏற்றத்தாழ்வுகளும் ஒழிந்து உலகம் முழுமையும் பொருளாதார சமத்துவ சமுதாயம் உருவாகுமானால், இன்றுள்ள மக்கட் தொகையைப் போல எத்தனையோ மடங்கு மக்கட் தொகைக்கு உலக மாதா உணவளிப்பாள் என்று தொழிலாளி வர்க்கப் பொருளாதார நிபுணர்கள் ஓதுகிறார்கள். அதனால்தான் சமத்துவம் கண்ட சோவியத் பூமி பத்து குழந்தைகளைப் பெறுகின்ற தாய்மார்களுக்கு "தாய் வீராங்கனை" என்ற விருதை வழங்கி, பதக்கம் அளித்து, வேண்டுகின்ற எல்லா வசதிகளும் செய்து கொடுக்கின்றது. தாய்மார்களுக்கு மகப்பேறு காலத்தில் தேவையான நாட்கள் விடுமுறை, ஊதியம், அலவன்சு, இலவச வைத்திய வசதி ஆகிய பல வசதிகள் ஆரம்பத்தில் அளிக்கப்படுகின்றன. தாய் வேலையில் ஈடுபட்டிருக்கும் பொழுது குழந்தைகளைப் பேணுவதற்காக ஒவ்வொரு தொழிற்சாலையிலும், ஆலையிலும் குழந்தை பராமரிப்பு நிலையங்கள் உள்ளன. பள்ளிப் பருவம் அடைந்த குழந்தைகளுக்கு அங்கேயே குழந்தைகள் பள்ளிகளும் இருக்கின்றன. பதினான்கு மக்களைப் பெற்ற ஒரு வீராங்கனைக்கு மூன்றடுக்கு மாடி கொடுக்கப்பட்டுள்ளது! நாட்டிற்கும், உலகிற்கும் நற்றொண்டுகளைச் செய்யும் நன்மக்களை நோய் நொடியின்றிப் பாதுகாத்து வளர்க்க தாய்மார்களுக்குத்தானே தெரியும்? சோவியத் யூனியனில் வைத்திய துறையில் பணியாற்றுகிறவர்களில் 65 சதவிகிதத்தினர் பெண்களாவர். சோவியத் நாட்டின் சுகாதார மந்திரியே ஒரு சகோதரிதான்! திருமதி கவ்ரிகினா!

### நிமிடத்திற்கு 176 குழந்தைகள்!

உலகில் ஒவ்வொரு நிமிடமும் சராசரி 176 குழந்தைகள் பிறப்பதாகக் கணக்கிட்டிருக்கிறார்கள். ஆனால் சோவியத் யூனியனில்தான் தாய்மார்களுக்கும், குழந்தைகளுக்கும் எல்லாவித வசதிகளும் செய்யப்பட்டிருப்பதன் காரணமாக சிசு மரணம் மிகக் குறைவாக இருக்கின்றது. ஆண்டுதோறும் அதிகரிக்கின்ற வசதிகளால் மேலும் மேலும் சிசு மரணம் குறைந்துகொண்டே வருகின்றது. நகரப் பகுதிகளிலும், கிராமப் புறங்களிலும் உள்ள குழந்தை வளர்ப்பு நிலையங்களில் மட்டும் மூன்று வயதிற்கும் குறைந்த எட்டு லட்சம் குழந்தைகள் பராமரிக்கப்படுகின்றன. "கின்டர் கார்டன்" என்று கூறப்படும் குழந்தை கல்வி நிலையங்கள் சோவியத் நாடு முழுமையும் 25 ஆயிரம் இருக்கின்றன. இத்தகைய வளர்ப்பு பராமரிப்பு நிலையங்களில் பள்ளிப் பருவத்தை அடையாத மொத்தம் 40 லட்சம் குழந்தைகள் இருக்கின்றன! இவைபோன்ற சிறந்த ஏற்பாடுகள் உலகில் வேறு எந்த நாட்டிலும் இல்லாததால் சிசு மரணம் அமெரிக்கா போன்ற நாடுகளில் அதிகமாகவும், சோவியத் யூனியனில் மிகக் குறைவாகவும் இருக்கின்றது. 1940ம் வருடம் மூன்று குழந்தைகள் இறந்தனவென்றால் 1954ம் ஆண்டு ஒரே ஒரு குழந்தை இறந்தது! இப்பொழுது இன்னும் குறைவு!

### இந்தியாவில் 50% சிசுமரணம்

குடும்பக் கட்டுப்பாட்டு திட்டம் பற்றியும், குழந்தைப் பேற்றைக் குறைத்துக்கொள்ள வேண்டிய அவசியம்பற்றியும் பிரச்சாரம் செய்வதற்கு எவ்வளவு அக்கறை எடுத்துக் கொள்கிறார்களோ அவ்வளவு அக்கறை பிரச்சாரத்திற்குப் பின்னர் பிறக்கின்ற குழந்தைகளைப் பேணிப் பாதுகாப்பதிலும் எடுத்துக்கொள்ள வேண்டும். இந்திய அரசாங்கம் நியமித்துள்ள Health Survey and Development Committee வெளியிட்டுள்ள அறிக்கையிலிருந்து "இந்தியாவின் மொத்த இறப்பில் 48·4 சத விகிதம் பத்து வயதிற்கும் குறைந்த குழந்தைகளின் இறப்பாகும்" என்பது தெரியவருகின்றது. ஏறத்தாழ இறப்பில் 50 சத விகிதம் சிசு மரணமாகும்!

1952-ம் ஆண்டு சென்னை மாநிலத்தில் மட்டும் 3,81,153 பத்து வயதிற்கும் குறைந்த குழந்தைகள் இறந்திருக்கின்றன. 1954 மே மாதம் முதல் 1955 ஜனவரி மாதம் வரை மட்டும் அரசாங்கக் கணக்கிற்கு எட்டிய அளவில் 1,56,306 பேர் பத்து வயதிற்கும் குறைவான குழந்தைகள் மரித்திருக்கின்றன. 1953-ம் ஆண்டு சென்னை நகரத்தில் மட்டும் 22,046 குழந்தைகள் உயிர் விட்டிருக்கின்றன. தாய்க்குத் தக்க உணவு, ஓய்வின்மை, பிரசவ வசதியின்மை, பிறந்த குழந்தைகள் ஆரோக்கியத்துடன் வளர்வதற்கான வசதியின்மை போன்ற பல காரணங்களாலேயே சிசு மரணம் அதிகரித்திருக்கின்றது என்பதனை அரசாங்கம் உணர வேண்டும்.

### கேரளாவைப் பார்!

சிசு மரணக் குறைப்பிற்கும், தாய்மார்களுக்குச் செய்யப்பட்டுள்ள பிரசவ வசதிகளுக்கும் சோவியத் யூனியனையோ, செஞ்சீனத்தையோ உதாரணமாகா காட்டவேண்டிய அவசியமில்லை.

**சோலை**

நமக்கு அண்டையிலுள்ள மாநிலம், ஆட்சிப் பொறுப்பேற்று ஒரு வருட காலமேயாகின்ற கேரள பொதுவுடமை அரசாங்கம் தொழிலாளத் தாய்மார்களுக்கு அதிகமான பிரசவ அலவன்சும் மற்றும் பல சலுகைகளும், வசதிகளும் கிடைக்கத்தக்க அளவில் பிரசவ அலவன்சு சட்டம் என்ற புதிய ஒரு தனிச் சட்டத்தை தாய்மார்களின் நலன் கருதி நிறைவேற்றியுள்ளதையே காட்டுவோம். இதுபோன்ற ஒரு சட்டம் இந்தியாவில் வேறு எந்த மாநிலத்தில் மட்டுமல்ல, சோவியத் யூனியன், செஞ்சீனம் போன்ற சோஷலிஸ நாடுகள் நீங்கலாக வேறு எந்த ஆசிய ஆப்பிரிக்க நாட்டிலும் நிறைவேற்றப்படவில்லை. ஐரோப்பாவில்கூட ஓரிரு நாடுகளில்தான் நிறைவேற்றப்பட்டுள்ளது.

கேரள அரசாங்க புதிய பிரசவ அலவன்ஸ் சட்டப்படி கர்ப்பவதியடைந்த ஒவ்வொரு தொழிலாள தாய்மாரின் சராசரி சமபளத்தை கணக்கிட்டு, அச்சம்பளத்தில் 7/12 பாகம் வீதம் மூன்று மாதத்திற்குரிய தொகை பிரசவ அலவன்ஸாகக் கொடுக்கப்பட வேண்டும். அதன்படி சராசரி மாதம் 60 ரூபாய் சம்பளம்வாங்குகின்ற தாய்மார்களுக்கு (5+7+3)105 ரூபாய் கிடைக்கும். பிரசவத்திற்குப் பின்னால் இரண்டுமாதம்வரை எந்தத் தாய்மாராவது உடல் நலம் தேராமல் இருந்தால் மேற்கூறிய கணக்குப்படி மேலும் ஒரு மாதத்திற்குரிய தொகை கிடைக்கும்.

ஒரு தாய் கர்ப்பமுள்ள ஆறு மாதத்திற்குப் பின்னால் எதிர்பாராத விதமாக கர்ப்பச் சிதைவு ஏற்பட்டால் அதனையும் பிரசவமாகவே கருதவேண்டும். மேற்கூறிய கணக்குப்படி உரிய தொகையும் அலவன்சாகக் கொடுக்கவேண்டும். இவை நீங்கலாக ஏதாவது ஒரு எஸ்டேட்டில் பிரசவத்திற்கான வைத்திய வசதியோ, பயிர்ச்சி பெற்ற நர்சுகளின் உதவியோ கிடைக்காமல் போனால் பிரசவிக்கின்ற தாய்க்கு "பிரசவ வைத்திய அலவன்சு" என்று மேலும் பத்து ரூபாய் கொடுக்கவேண்டும்.

பிரசவத்திற்குப்பின்னால் உடல் நலமுற்று வேலைக்குத் திரும்பிவிட்ட வேலை நேரத்தின்போது அவசியமேற்பட்டால் தினசரி இரண்டு முறை குழந்தைக்குப் பாலூட்ட அனுமதிக்கப்பட வேண்டும். இதனை மீறுகின்ற முதலாளி தண்டனைக்குள்ளாவார் என்று சட்டம் சொல்லுகிறது! பள்ளிப் பருவத்தை யடைந்த, 1200 ரூபாய்க்கும் குறைவான வருமானமுள்ள பெற்றோர்களின் குழந்தைகளுக்கு இலவசக் கல்வியும் அளிக்கப்பட வேண்டும்; அளிக்கப்பட்டு வருகிறது. இத்தகைய முற்போக்கு சட்டங்களை நிறைவேற்றுவதன் மூலமும், அவற்றை நடைமுறைக்குக் கொண்டு வருவதன் மூலமே சிசு மரணங்களைக் குறைக்க முடியும். நேருவின் பிறந்த தினத்தை குழந்தைகளின் தினமாகக் கொண்டாடுகின்ற, நேரு வருகிறாரென்றால் விமான நிலையம் வரை குழந்தைகளைக்கொண்டு வந்து நிறுத்துகின்ற நமது அரசாங்கம் சர்வதேசக் குழந்தைகள் தினத்தில் கேரளத்தைத் திரும்பிப் பார்க்க வேண்டும்.

# மனிதன்

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

அழுத்தம் திருத்தமாகச் சொல்லியிருக்கிறார். நாம் நித்திய கர்மானுஷ்டானங்களை பார்த்துக் கொண்டிருந்தால் போதும் எல்லாம் அவன் லீலை! அவன் லீலை!

ஆல்பர்ட்: சந்தையில் போட்டாப் போட்டி தான் யுத்தத்தை தோற்றுவிக்கிறது. முதலாளிகளின் தேசியம் சந்தை போட்டாப் போட்டியில் சென்று நிற்கும். இந்த போட்டாப் போட்டி நாட்டுக்கு நாடு தோன்றுகிற பொழுது யுத்தம் மூளும். ஆங்கிலத் தொழிலாளிக்கு ஜெர்மன் தொழிலாளியிடம் என்ன சண்டை? எனவே பொருளாதார ரீதியில்.........

பிராய்டு: (நடுவில் குறுக்கிட்டு) பொருளாதாரத்திற்கும் போருக்கும் ஒட்டுமில்லை உறவுமில்லை.

ஆல்பர்ட்: உண்டு, உண்டு.

பிராய்டு: இல்லை, இல்லை.

அன்புநேசர்: அமைதி, அமைதி

ஆல்பர்ட்: என்னை பேச விடுகிறார் இல்லை.

அன்பு நேசர்: அவசரப்படுகின்றார். அவரே பேசட்டும்.

பிராய்டு: தனி மனிதனின் மனதில் ஊறும் எண்ணச் சுழல்கள், வக்கிர உணர்ச்சிகள் கணக்கில் அடங்கா. நாம் வகுத்துக் கொண்டிருக்கும் சமூக அமைப்பு, சட்டங்கள் இவைகளால், இவ்வெண்ணங்கள் மேல் வாரியாக ஒடுக்கப்படுகின்றன.

ஆல்பர்ட்: (குறுக்கிட்டு) நீர் இதைத் தான் சொல்வீர் என்பது எனக்குத் தெரியும்.

பிராய்டு: (தொடர்ந்து) எனவே இவ்வெண்ணங்கள் தறிகெட்டுப் பாய்ந்து தனது அபிலாஷைகளை திருப்தி செய்து கொள்ள சந்தர்ப்பம் தேடி அலைகின்றன, சிருஷ்டித்துக்கொள்கின்றன, போர் ஒரு சமூகத் தேவை.

வள்ளுவர்: சுக வாழ்க்கையைப் போலவே புறவாழ்க்கையும் முக்கியமானதுதானே?

ஆல்பர்ட்: அப்படிச் சொல்லுங்கள். அப்படிச் சொல்லுங்கள்.

(ஆல்பர்ட் ஓடிவந்து வள்ளுவரை தழுவிக்கொள்கிறார்.)

சின்ன சாஸ்திரி: புற வாழ்க்கைப்போல் சுக வாழ்க்கையும் முக்கியம் தானே?

அவ்வை; அதிலென்ன ஐயம்?

கிங்காங்: அகமும் முக்கியமில்லை, புறமும் முக்கியமில்லை. உடம்புதான் முக்கியம். பலாப் பழம் எவ்வளவு ருசி! எவ்வளவு ருசி!

சுப்பு: உலகத்தைத் திருத்தி நாம் அந்த உலகத்தில் வாழவா? முடியாத காரியம். எனவே நாம் வேறு உலகத்திற்குப் போய்விட வேண்டும். கொஞ்சம் மருந்தை உருட்டி போட்டுக்கொண்டால் போதுமானது. இந்திரலோகம் நமது காலடியில்...

மறவாழி: நான் பேசவேண்டியதை எல்லோரும் பேசிவிட்டார்கள். மேலும் கிழிந்துபோன படத்தை ஒட்டிக்கொண்டிருப்பதைவிட புதிய படமொன்று வாங்கிவிடலாம் என்பது எனது யோசனை.

ஒப்பன் ஹைமர்: அணுவைப் பிளந்தோம். அது உலகத்தைப் பிளக்கிறது எங்கள் உள்ளத்தைப் பிளக்கிறது.

அன்பு நேசர்: எல்லோரும் எதை எதையோ சொல்கின்றீர்கள் எனக்கு ஒரே குழப்பமாய் இருக்கின்றது. தலை சுற்றுகிறது ஒரு தேசத்தை மற்றொரு தேசத்தோடு இணைக்க முடியவில்லை. எப்படி முடியும்? பிளவுகள், கருத்து வேறுபாடுகள், இனச் சண்டைகள் தெரிந்திருந்தும் இணைப்பது மடமையன்றோ? கண்ணீர் விடுதைத் தவிர வேறு வழியில்லை.

சுப்பு: அவ்வை, மாங்குடி, திருவள்ளுவர் மூன்று பேரும் உலகப் படத்தையே பார்த்ததில்லை. பின்னர் அவர்கள் இணைப்பது பற்றி எப்படி யோசனை கூற இயலும்.

அன்பு நேசர்: (அதை கவனியாது) எனவே இன்றும் அந்த துண்டுப் படங்களை பெட்டியில் போட்டு பூட்டுகிறேன். ஐம்பது ஆண்டுகளாக இதைத்தானே நித்தம் நித்தம் செய்கின்றேன். இனி மேல் நாம் கூடவேண்டியதில்லை. இதுதான் கடைசி கூட்டம். கலைத்துவிடுகின்றேன். கழகத்தை (தேம்பி அழுதபடி) தயைசெய்து துண்டுத்தாள்களை பொறுக்கித் தாருங்கள்.

(எல்லோரும் சுற்றும் முற்றும் பார்க்கிறார்கள்.)

எல்லோரும் ஒரே குரலில்—துண்டுத் தாள்களை காணவில்லையே!

(அங்கும் இங்கும் தேடுகிறார்கள்.)

அவ்வை: அன்புநேசரின் செல்வக் குழந்தை கொண்டுபோயிருக்கும்.

அன்புநேசர்: அருள்! அருள்! கண்ணே அருள்!

அருள் உலகப் படத்தோடு நுழைகிறான். உலகப் படம் முழுசாக இருக்கிறது!

எல்லோரும் சிறுவனை நோக்கி ஓடுகிறார்கள். படத்தை வாங்கி பார்க்கிறார்கள்.

அன்பு நேசர்; வெகு கணக்காய் ஒட்டியிருக்கிறாயே! எப்படியடா ஒட்டினாய்? உலகப் படத்தைப் பார்த்திராத நீ எப்படியடா உலகத்தையே இணைத்தாய், சொல்லுடா சொல்லு!

அருள்: நான் உலகப் படத்தை பார்க்கவில்லை அப்பா! அதைப் பார்த்து நான் ஒட்டவுமில்லை, பின்புறம் ஒரு மனுஷன் படம் வரைந்திருந்தது. அதை வைத்துக்கொண்டு ஒட்டினேன். எனக்கு உலகப் படம் தெரியாவிட்டாலும் மனுசன் படம் தெரியாதா அப்பா?

திருவள்ளுவர்:<br>அவ்வை:<br>மாங்குடி மருதனார்: } இதைத்தான் செய்ய வேண்டுமென்று நாங்கள் முன்னரே கூறியிருக்கிறோம்

அன்புநேசரின் கண்களிலிருந்து கண்ணீர்—ஆனந்தக் கண்ணீர் பாய்கிறது.

(3-ம் பக்கத்தொடர்ச்சி)

மூலம் சர்க்காரின் நியமனக் குழுக்களில் அவர்களது அவசியத்தை உணரச் செய்யவேண்டும்.

### குறுகிய போக்கை விடுக

"தத்தம் கட்சிகளின் குறுகிய நலன்களை விட்டுக் கொடுத்து ஏகாதிபத்திய எதிர்ப்புப் போரில் கட்டப்பட்ட தேசிய ஒற்றுமையின் விளைவு சுதந்தரம். இதே ஒற்றுமை இன்னும் தேவைப்படுகிறது. பரஸ்பரம் சகிப்புத் தன்மையும், திருத்தும் நோக்கத்துடன் கூடிய விமர்சனமும், ஏன் போராட்டமும்கூட அவசியமே. எனினும் இவற்றின் ஒட்டு மொத்தமான விளைவு தேச முன்னேற்றம் என்றிருக்க வேண்டும். அத்தகைய பணியில் அனைவரும் ஒன்றுபட வேண்டும். இதுவே இன்றைய தேவை.

இந்த அறவுரையை மேற்கொண்டு காங்கிரஸ் அரசாங்கமும் காங்கிரஸ் கட்சிக்குள் உள்ள நேர்மையாளர்களும் சிந்தித்து ஒன்றுபட்டு செயல்பட முன் வருவார்கள் என எதிர்பார்க்கின்றோம். —எஸ். நாராயணன்.




பட விமர்சனம்

# அவன் அமரன்

தயாரிப்பு : பீப்பிள்ஸ் பிலிம்ஸ். டைரக்ஷன் ; எஸ். பாலச்சந்தர்.

காதலையும் கடமையையும் சமுதாய தர்மத்துடன் சரியான விதத்தில் இணைத்து சாதாரண தொழிலாளி மக்களின் வாழ்க்கைப் போராட்டத்தைச் சித்தரிக்கும் விதத்திலும், இன்றைய சமூக அமைப்பிலுள்ள சீர்கேடுகளை விளக்கி நாட்டு முன்னேற்றத்திற்கு வழி காட்டும் விதத்திலும் அமைத்து வெளிவரும் சமூகப் படமே 'அவன் அமரன்'. திரைப்பட உலகில் இதன் கதை அமைப்பு ஒரு திரும்புமுனையாகத் திகழ்கிறது.

தொழிலாளி வர்க்கத்தையே கருவறுப்பேன் என்று கொக்கரிக்கும் ஒரு மில் முதலாளி. சுரண்டப்படும் தொழிலாளி வர்க்கத்தின் நலனைப் பாதுகாக்க முதலாளி வர்க்கத்தை எதிர்த்துப் போராடும் ஒரு தொழிலாளி தலைவன்.

"சமுதாயத்தைச் சீர்திருத்த நான் பாடுபடுவேன், ஒன்றில் அது உயரவேண்டும், அல்லது நான் மடியவேண்டும்" என்று போராடி, ஒரு முதலாளியின் வஞ்சகச் சூழ்ச்சிக்குப் பலியாகும் தொழிலாளர் தலைவன் அருளாக கே. ஆர். ராமசாமி நடிக்கிறார். இவரது பாகம் சென்சார் போர்டின் கைங்கர்யத்திற்குள்ளாகி வெகுவாகப் பாதிக்கப்பட்டிருப்பது நன்கு தெரிகிறது. இவ்வித 'சென்சாரிங்' இல்லாதிருந்தால் இவரது நடிப்பு இன்னும் நன்றாக சோபித்திருக்கும்.

அக்கிரமத்திற்கே ஒரு அவதார புருஷனாகத் திகழும் ஒரு தந்தை. (அவரே முதலாளி.) அவருக்கு, அவரது அக்கிரமத்தையே எதிர்த்துப் போராடும் நீதி உள்ளம் படைத்த ஒரு மகள். கோடிக்கணக்கான பணத்திற்கு வாரிசாகத் திகழவேண்டியவள், அவைகளையெல்லாம் உதறித் தள்ளிவிட்டு, ஒரு தொழிலாளி தலைவனை மணந்து, எளிய வாழ்க்கையை மேற்கொண்டு சமுதாயச் சீர்கேடுகளை எதிர்த்துப் போராடுகிறாள். ராஜசுலோசனாவிற்கு இந்தப் பாகம் மிகவும் பொருத்தமாக அமைந்திருக்கிறது, நன்கு நடித்துள்ளார்.

அநீதிக்கும், அக்கிரமத்திற்கும் பிறப்பிடமான முதலாளி வர்க்கத்தின் பிரதிநிதியாக பாலையா நடிக்கிறார். இவர் நடிக்கிறார் என்று சொல்வதைவிட அந்தப் பாத்திரமாகவே மாறிவிடுகிறார் என்று சொல்லலாம். அபாரமாயிருக்கிறது அவரது நடிப்பு.



தன் மகன் படித்துப் பட்டம் பெற்று பெரிய பெரிய உத்தியோகங்களெல்லாம் வகிப்பான் என்று கனவு காணும் ஒரு தாய். வறுமையை எதிர்த்துப் போராடி அவனைப் படிக்க வைக்கிறாள். ஆனால் அவள் கனவு நனவாகவில்லை. மகனுக்காக தன் வாழ்வில் பெரும் பகுதியைத் தியாகம் செய்துவிட்டு சமூகத்துக்காக அதேமகனைப் பலிகொடுத்த வீரத் தாயாக மாறிவிடுகிறாள். தாயாக நடிக்கும் கண்ணாம்பா பார்ப்போரின் உள்ளங்களை உருக்கி, கண்களில் நீர் கசியச் செய்துவிடுகிறார். உணர்ச்சிமிக்க நடிப்பு இவரது பாத்திரத்தில் மிளிர்கிறது.

அக்கிரமத்தைக் கண்டு மனம் நொந்து, நீதியை நிலைநாட்டத் துணைபுரியும் மனித ஹிருதயம் படைத்த ஒரு கத்தோலிக்கச் சாமியாராக எஸ். வி. சுப்பையா நடிக்கிறார். கண்ணாம்பாவுக்கு அடுத்தபடியாக நம் உள்ளத்தை உருக்கும் விதத்தில் உணர்ச்சிப் பிழம்பாக நடிக்கிறார் இவர். இவரது நடிப்பும், இவர் முகத்தில் தவழும் சாந்தமும் நம்மை மெய்மறக்கச் செய்துவிடுகின்றன.

பிரண்ட் ராமசாமி, முத்துலட்சுமி ஜோடி நகைச்சுவை பாகத்தை நன்கு பூர்த்தி செய்கின்றனர். நகைச்சுவை அம்சத்தில் முதற் பகுதி மிகவும் ரசிக்கத்தக்கதாய் அமைந்திருக்கிறது.

தொழிலாளர் தலைவன் தொழிலாளர்களை ஒன்றுசேர்த்து அவர்களது பல்வேறு வாழ்க்கைப் பிரச்சினைகளை எடுத்துக்கொண்டு அவைகளைத் தீர்க்கும் விதத்தில் சில அம்சங்களை இப்படத்தில் சேர்த்திருக்கலாம்.

இந்திரலோகத்தில் காதலர்கள் உல்லாச நடனம் புரியும் கனவுக் காட்சிக்குப் பதில் நிதர்சனமான காதல் காட்சியாக, வேறு ரூபத்தில் சித்தரித்திருக்கலாம்.

டைரக்டரின் திறமை படத்தின் ஒவ்வொரு காட்சியிலும் பளிச்சிடுகிறது. குறிப்பாக கதாநாயகனின் புதுஉலகக் கனவுக் காட்சி, முதலாளி — தொழிலாளி தலைவனின் (க்ளோஸ் அப்) விவாதக் காட்சி, ஒரே சமயத்தில் முதலாளி—தொழிலாளிகள் வாழ்க்கையைச் சித்தரிக்கும் நடனக் காட்சி, இறுதியில் மயானக் காட்சி முதலிய இடங்களில் அவருடைய முத்திரை நன்றாகப் பதிந்திருக்கிறது.

எல்லாவற்றிற்கும் மேலாக, புது உலகக் கனவுக் காட்சி— அதைப் படமாக்கிய விதத்திலும் சரி, கருத்திலும் சரி பார்ப்போரின் உள்ளங்களை அப்படியே ஒரு உலுக்கு உலுக்குவதாக அமைந்திருக்கிறது.

தயாரிப்பாளர்களில் ஒருவரான நாகர்கோயில் எஸ். நாகராஜனே இதன் கதை, வசனங்களை அமைத்துள்ளார். கதையும், வசனமும் உழைப்பாளி மக்களின் வாழ்க்கையை அப்படியே பிரதிபலித்துக் காட்டுவதாக அமைந்திருக்கிறது. வசனம் இயற்கையாக, யாவரும் ரசிக்கத் தக்க விதத்தில் அமைந்திருக்கிறது.

இசையமைப்பில் டி. எம். இப்ராஹிம் நல்லதொரு வெற்றியைப் பெற்றுவிட்டார். இரண்டு மூன்று பாட்டுக்கள் (ஹிந்தி மெட்டின் காப்பியாக இருந்தாலும் கூட) கேட்க இனிமையாக இருக்கின்றன. குயிலன் எழுதிய 'ஆசியாவின் ஜோதியாகப் பாரதம் எழுந்ததே' என்ற பாட்டில் கருத்துப் பொதிந்துள்ளது.

நிமாய்கோஷ், மணியம் ஆகியவர்களின் ஒளிப்பதிவு, அவர்களின் திறமைக்கு நல்லதொரு எடுத்துக்காட்டாகும்.

'மனிதன் தனக்காக மட்டும் அல்ல, சமூகத்திற்காகவும் வாழ்கிறான்' என்ற கருத்தைத்தான் இந்தப் படம் போதிக்கிறது. மனித சமுதாயத்தின் வளர்ச்சியைப் புரிந்துகொள்ள விரும்பும் ஒவ்வொருவரும் அவசியம் பார்க்க வேண்டிய படம் அவன் அமரன்.



கண்ணதாசன் பிலிம்ஸின் 'மாலையிட்ட மங்கை'யில் மைனாவதி



சித்ரா மூவீஸ் 'அதிகாரி'யில் பாலாஜி, எம். என். ராஜம், ஈ.வி. சரோஜா.

# செங்கோட்டை சிங்கம்

## காட்டில் உருவான வீரம் செறிந்த படம்

காட்டு மிருகங்கள் பலவற்றுடன் கதாநாயகன் நேருக்கு நேர், தத்ரூபமாகப் போர் புரியும் வீரம் செறிந்த காட்சிகளை "செங்கோட்டை சிங்கம்" படத்தில் ரசிகர்கள் விரைவில் காணப் போகிறார்கள்.

1000 அடி உயரத்தில் தேன் அருவி. செங்குத்தான மலையின் இடுக்கிலிருந்து தேன் எடுத்து கதாநாயகன் உதயகுமாரும், தங்கையாக நடிக்கும் மைனாவதியும் திரும்புகையில், மரங்கள் தாக்கி முறிக்கப்படும் சப்தம் கேட்கிறது. அந்த திசையில் பார்க்கிறார்கள் உதயகுமாரும் மைனாவும். மரங்களை முட்டி வீழ்த்தியது பயங்கர காண்டாமிருகம்! கதாநாயகனைத் தாக்க அந்த மிருகம் விரைந்து வருகிறது. 'அந்தப் பக்கம் போ' என்று தங்கையிடம் கூறிய கதாநாயகன் காண்டா மிருகத்துடன் சண்டை போட்டு, அதைக் கொல்லுகிறான்! இதற்குமுன் கண்டிராத பிரமிக்கத் தக்க காட்சி இது!

இப்படத்தின் வெளிப்புறக் காட்சிகளில் பெரும்பாலும் உதகமண்டலத்திலும், அங்கிருந்து 46 மைல் தூரத்தில் உள்ள முதுமலைக் காட்டிலும் எடுக்கப்பட்டுள்ளன. காட்டு மிருகங்களுக்கு பெயர் பெற்றது முதுமலை.

சிறுத்தை, சிங்கம், யானை, முதலிய மிருகங்களின் சண்டைக் காட்சிகள் பிரமிக்கத்தக்க வகையில் அமைந்திருக்கின்றன.

பரபரப்பான சண்டைகளை பார்ப்பதோடு, இயற்கை இன்பத்தையும் இந்தப் படத்தில் ரசிகர்கள் பருகலாம். குந்தா நீர் வீழ்ச்சி அடியிலிருந்து கதாநாயகி ஆடுகிறாள், பாடுகிறாள்.

இவ்வாறு ஏராளமான இன்பங்களையும் இந்தப் படத்தில் காணலாம். இப்படத்தை பிலிம் பைனியர்ஷியர்ஸ் ஜூலை 4-ம் தேதி வெளியிடுகிறார்கள்.

## ஜெமினி ஸ்டுடியோவில் வாசு பிலிம்ஸாரின் புதிய படம்!

வாசு பிலிம்ஸ் என்ற புதிய படக் கம்பெனி ஒரு தமிழ்ப் படத்தை உருவாக்கத் துவங்கியுள்ளனர். இந்தப் படம் ஜெமினியில் தயாராகும். வலம்புரி சோமநாதன் இந்தப் படத்திற்கான கதை, வசனங்களை எழுதி வருகிறார். இந்தப் படத்திற்காக கண்ணதாசன் இயற்றிய இரு பாடல்கள் சென்ற 12-ந் தேதி ஜெமினி ஸ்டுடியோவில் பதிவாக்கப்பட்டன. ராஜேஸ்வரியும், சுசீலாவும் அந்தப் பாட்டுக்களைப் பாடினார்கள்.

## சத்தியவான்

ராஜம் பிக்சர்ஸார் 'சத்தியவான்' என்ற சமூகப்படமொன்றை தயாரிக்கப் போகிறார்கள். எம். ஏ. வேணுவின் சகோதரர்களான எம். ஏ. தியாகராஜன், சுந்தரேசன், ராதா ஆகியவர்களே இந்தக் கம்பெனியின் உரிமையாளர்கள். எஸ். எஸ். ராஜேந்திரன், பி. சரோஜா தேவி பிரதம பாகத்தில் நடிக்கும் இந்தப் படத்தை ஜி. ஆர். நாதன் டைரக்ட் செய்வார். சங்கீத அமைப்பை கே. வி. மஹாதேவனும், பாட்டுக்கள் அமைப்பை மருதகாசியும் கவனித்துக்கொள்வார்கள்.

## டியென் பிலிம்ஸாரின் தங்கச் சுரங்கம்

டியென் பிலிம்ஸார் 'தங்கச் சுரங்கம்' என்ற கதையொன்றைப் படமாக்க ஏற்பாடு செய்து வருகின்றனர். இதில் எஸ். வி. சுப்பையா, அசோகன், ஆர். பாலசுப்பிரமண்யம், பி. டி. சம்பந்தம், பண்டரிபாய், மைனாவதி, சந்தியா ஆகியவர்கள் நடிப்பார்கள்.



# தண்ணீருக்குள் கனவுக் காட்சி!

## நாடோடி மன்னனில்

தமிழ்ப்பட உலகில் சாதாரணமாகக் கனவுக் காட்சிகளை இந்திரலோகத்தில் நடைபெறுவதாகவே சித்தரித்துக் காட்டுவது வழக்கம். ஆனால் எம். ஜி. ஆர். தயாரிக்கும் நாடோடி மன்னன் படத்திலோ தண்ணீருக்குள் காதலர்கள் ஆடிப் பாடுவதாக, கனவுக் காட்சி ஒன்றைபடமாக்கி இருக்கிறார்கள்.

இந்தக் காட்சியைப் படமாக்குவதற்காக ஏராளமான செலவில் வாஹினி ஸ்டுடியோவில் ஒரு 'செட்' அமைக்கப்பட்டது. 'செட்'டின் நடுவே ஒரு தெப்பக் குளம், அந்தக் குளத்தில்தான் எம். ஜி. ஆரும், பி. சரோஜா தேவியும் ஆடிப்பாடும் அந்தக் காட்சி படமாக்கப்பட்டது. இந்தக் காட்சிகளெல்லாம் கேவா கலரில் படமாக்கப்படுகின்றன.

பல லட்சம் ரூபாய்களை மென்று விழுங்கித் தயாராகும் இந்தப் படம் ரசிகர்களின் பொறுமையை அளவுக்கு மீறி சோதித்து வருகிறது. இம்மாத இறுதியில் வெளியிடப் போவதாக அறிவிக்கப்பட்ட இப்படம் இம்மாதமும் வெளிவராது என்று தெரிகிறது. இன்றைய திரை உலகில் பிரகாசிக்கும் பல நட்சத்திரங்களைக் கொண்டது இந்தப் படம்.



'ஆல் இந்தியா பிலிம் கார்ப்பரேஷன் அளிக்கும் பாட்டாளியின் சபத'த்தில் ஒரு உணர்ச்சிகரமான காட்சி.

# கூட்டு ஸ்ட்ரைக் கமிட்டி அறிவிப்பு

## பொய்ப் பித்தலாட்டங்களையும் வதந்திகளையும் நம்பாதீர்கள்!

சென்னை, ஜூன் 21—

மதராஸ் ஹார்பர் தொழிலாளர் சங்கமும், சென்னை துறைமுக ஐக்கிய தொழிலாளர் சங்கமும் கொண்ட கூட்டு ஸ்டிரைக் கமிட்டி, தொழிலாளர்களுக்கு கீழ்க்கண்ட முக்கிய அறிக்கையை விடுத்துள்ளது.

### முக்கிய அறிவிப்பு

அன்புள்ள தொழிலாளத் தோழர்களே!

தொழிலாளர்கள் வேலைக்கு வராவிட்டால் நடவடிக்கை எடுக்கப்படுமென்றும், வேலையிலிருந்து நீக்கப்படலாமென்றும் உருட்டி மிரட்டி தொழிலாளர்களுக்கு அதிகாரிகள் கடிதங்கள் அனுப்பிக்கொண்டிருக்கிறார்கள். இதற்கெல்லாம் என்ன பதில் அனுப்ப வேண்டுமோ, எப்பொழுது அனுப்ப வேண்டுமோ, அப்பொழுது சங்கம் அனுப்பும். பேச வேண்டிய நேரம் வரும்போது அதிகாரிகளையும் மந்திரிகளையும் கண்டு பேசும்.

### கவனித்து வருகிறோம்

போலீசாரின் துப்பாக்கிப் பிரயோகத்தால் மரணமடைந்த தொழிலாளத் தியாகிகளின் சடலங்களை சங்க மரியாதைகளோடு ஊர்வலமாக எடுத்துச் சென்று மயானத்தில் அடக்கம் செய்யும் வேலையையும், குண்டடிபட்ட 200 தோழர்களுக்கு சரியான சிகிச்சை கிடைக்கும்படி ஆவன செய்யவும், கைதியான 37 பேர்களையும் ஜாமீனில் கொண்டு வரவும், அதே சமயத்தில், பம்பாய், கல்கத்தா, விசாகப்பட்டினம், கொச்சி ஆகிய துறைமுகங்களில் தொழிற்சங்கங்களுடன் ஜீவனுள்ள தொடர்பு வைத்துக் கொண்டு பொது வேலை நிறுத்தத்தை வெற்றிகரமாக முடிக்கும் வேலையையும் சங்கம் கவனித்துக் கொண்டு வருகிறதென்பதை தொழிலாளர்களுக்கு அறிவித்துக் கொள்ளுகிறோம்.

உறுதியாக இருங்கள். பொய்ப் பித்தலாட்டங்களையும் வதந்திகளையும் நம்பாதீர்கள். வெற்றி திண்ணம்.

## எண்ணெய்த் தொழிலில் 90- 10 சதவிகித லாபப் பிரிவு

கெய்ரோ, ஜூன் 18—

எண்ணெய்த் தொழில் நடத்தும் விஷயத்தில் மத்திய கிழக்கு நாடுகளுக்கும் சோவியத் நாட்டிற்குமிடையே 90-10 சதவிகிதத்தில் லாபம் பகிர்ந்து கொள்ளும் அடிப்படையில் உதவி புரிய சோவியத் நாடு முன்வந்துள்ளது.

எண்ணெய்த் தொழிலுக்கு அவசியமான யந்திரங்கள், தளவாடங்கள், தொழில் நிபுணர்கள் இவை உதவவே இந்தப் பத்து விகித லாபத்தை எடுத்துக்கொள்ளும் என்று 'அகர்ஸா' என்ற பத்திரிகை தகவல் வெளியிட்டிருக்கிறது.

இப்போது எண்ணெய்த் தொழிலில் ஈடுபட்டிருக்கும் அமெரிக்கா இந்த நாடுகளில் 50-க்கு 50 எடுத்துக்கொள்கிறது என்றும் தெரிகிறது.

## அப்பர் அச்சகத்தில் உள்ளிருப்பு வேலை நிறுத்தம்

சென்னை, ஜூன் 20—

சென்ற சில ஆண்டுகளாக சென்னை அப்பர் அச்சகத் தொழிலாளர்களின் கோரிக்கைகள் பற்றியும், வேலையைவிட்டு நீக்கப்பட்ட 3 தொழிலாளர்களுக்கு மீண்டும் வேலை கொடுக்க வேண்டுமென்றும் கடந்த ஆறு மாதங்களாக லேபர் ஆபீசர் மூலமாகவும், நேரடி பேச்சு வார்த்தை மூலமாகவும் பேசியும் நிர்வாகத்தினர் பிடிவாதமாக கொடுக்க முடியாது என்று மறுத்துவிட்டனர். ஆகவே, 20-6-58 காலை 9-மணி முதல் மிக அமைதியான முறையில் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்துகொண்டு வருகிறார்கள்.

## பஞ்சாலை நெருக்கடி தீர்க்க மதுரையில் மகாநாடு 24-6-58ல் நடைபெறும்

மதுரை, ஜூன் 20—

பஞ்சாலைகளில் ஏற்பட்டிருக்கும் நெருக்கடி சம்பந்தமாக தென் ஜில்லாக்களின் பஞ்சாலைத் தொழிலாளர்கள், கைத்தறி, மாஸ்டர் வீவர்கள் ஜவுளி, நூல் வியாபாரிகள் ஆகிய சகல பகுதியினரையும் பாதிக்கும் பிரச்னைகள் குறித்து விவாதிப்பதற்காக, ஜவுளி, நூல் தொழில்-வர்த்தக பரிகார மகாநாட்டு வரவேற்புக் கமிட்டி அமைப்புக் கூட்டம் 24-6-58 அன்று மாலை 6 மணிக்கு மதுரை நீல மாளிகையில (சென்ட்ரல் பாங்க் எதிர்புறம்) நடைபெறும்.

இது சம்பந்தமான அழைப்பிதழ்கள் அ. இ. தொ. ச காங்கிரஸின் உபதலைவரும், மதுரை பஞ்சாலைத் தொழிற்சங்க உபதலைவருமாகிய தோழர் பி. ராமமூர்த்தியின் கையெழுத்துடன், சம்பந்தப்பட்ட எல்லா ஸ்தாபனங்களுக்கும் அனுப்பப்பட்டுள்ளன.

# சென்னை சர்க்காரின் நடவடிக்கை நாட்டுக்கே இழுக்கு ஆகும்

## துப்பாக்கிப் பிரயோகத்தை எதிர்த்து கண்டனக் குரல் எழுப்புக

### சோஷலிஸ்ட் கட்சி அறிக்கை

சென்னை, ஜூன் 18—

அகில இந்திய துறைமுகத் தொழிலாளர் சம்மேளனம் தனது கோரிக்கைகள் வெற்றியடைய சகல துறைகளையும் கையாண்டு தோல்வியுற்றதின் விளைவாக கடைசி ஆயுதமாகிய வேலைநிறுத்தத்தை மேற்கொண்டுள்ளனர். இது துறைமுகத் தொழிலாளர்களுக்கும் இந்திய சர்க்காருக்கும் ஏற்பட்டுள்ள போராட்டம், ஆனால் இதில் மாகாண சர்க்காருக்கு ஒழுங்கையும் அமைதியையும் நிலைநாட்டுவதுதான் பொறுப்பே தவிர தொழிலாளர் நலனுக்குப் பாதகமாக வெளியூர்களிலிருந்து கருங்காலிகளை அமர்த்திக் கொணர்ந்து வேலை நிறுத்தத்தை உடைத்தெறிய முற்படுவதல்ல. அப்படி நடவடிக்கையில் இறங்கி இருக்கும் சென்னை சர்க்காரின் போக்கு மிக வன்மையாக கண்டிக்கத்தக்கது.

அத்தியாவசிய பொருள்கள் இறக்குமதிக்கு ராணுவத்தை உபயோகப்படுத்திக்கொள்ள தொழிலாளர்கள் தலைவர்களே ஒப்புக்கொண்டிருப்பது பொதுமக்களின் நலனைக் கருதியே என்பது தெளிவாகும். ஆனால் அவர்கள் நலனுக்குப் பாதகமாக சர்க்காரால் கொண்டுவரப்படும் புது ஆள்களை வேலைக்குச் செல்ல வேண்டாமென்று கேட்டுக் கொள்ளும் வகையிலே மறியல் செய்த தொழிலாளர்களை மிருகத்தனமாக சுட்டு கொன்றது காட்டுமிராண்டித்தனமான செயலுக்கொப்பாகும்.

இதுமாதிரி நடவடிக்கைகள் வேறெந்த மாகாணத்திலும் மேற்கொள்ளப்படாமல் இருக்க சென்னை மாகாணத்தில மட்டும் சர்க்காரின் தலையீடு துப்பாக்கிப் பிரயோகமும் படுகொலைகளும் நடந்திருப்பது தமிழ் நாட்டின் நற்பெயருக்கே இழுக்குத் தேடித் தந்துவிட்டது.

எனவே இந்த சர்க்காரின் நடவடிக்கை ஜனநாயகத்திற்கும் தொழிலாளர்கள் உரிமைக்கும் நாட்டின் நற்பெயருக்கும் பங்கம் விளைவிக்கும் முறையிலே இருப்பதால் இவற்றை எதிர்த்து தமிழ் நாட்டில் உள்ள அனைவரும் கட்சி பேதமின்றி கண்டனக் குரல் எழுப்ப வேண்டுகிறேன் என்று சோஷலிஸ்ட் கட்சியின் கூட்டுக் காரியதரிசி ப்ர. இராதா ஒரு அறிக்கைவிடுத்துள்ளார்.

## தூத்துக்குடி உப-தேர்தல் அபேட்சைகள் தாக்கல்

### ஜூலை 25-ல் தேர்தல்

தூத்துக்குடி, ஜூன் 19—

தூத்துக்குடி தொகுதியிலிருந்து சென்னை சட்ட சபைக்கு நடக்கவிருக்கும் உப-தேர்தலுக்கு காங்கிரஸ், கம்யூனிஸ்ட், தி. மு. க. சார்பில் கீழ்வரும் அபேட்சகர்கள் இன்று தங்கள் அபேட்சா பத்திரங்களைத் தாக்கல் செய்தனர்.

எஸ். ஏ. முருகானந்தம், ஜி. சுடலைமுத்து (கம்யூனிஸ்ட்).

ஏ. சாமுவேல் நாடார், எஸ். பொன்னுசாமி நாடார் (காங்கிரஸ்)

எஸ். சிவசாமி, ராமலிங்கம் (தி.மு.க).

ஜூன் 23-ந் தேதியன்று அபேட்சா பத்திரங்கள் பரிசீலனை செய்யப்படும். வாபஸ் வாங்குவதற்கான கடைசி தேதி ஜூன் 25.

ஜூலை 25-ந் தேதியன்று தேர்தல் நடைபெறும்.

# துப்பாக்கிப் பிரயோகங்களை அடியோடு தடை செய்க

## சென்னை போலீஸ் அட்டூழியத்திற்கு பத்திரிகையாளர் சங்க கண்டனம்

சென்னை, ஜூன் 19—

சென்னை பத்திரிகையாளர் சங்க அவசரக்கூட்டம் இன்று நடைபெற்றபோது துறைமுகத் தொழிலாளர்கள் மீது துப்பாக்கிப் பிரயோகம் நடத்தி எட்டு பேர்களை போலீசார் கொன்றது சம்பந்தமாக கடுமையான கண்டனம் தெரிவிக்கப்பட்டது.

அதிகாரப் பற்றற்றவர்களையும் கொண்ட பகிரங்க பொது விசாரணை நடத்தப்பட வேண்டும் என்றும், இத்தகைய கொடுமைகள் இனி நடவாத வண்ணம் பார்லிமெண்ட் ஆவன செய்ய வேண்டும் என்றும், தேச பாதுகாப்பிற்கு ஆபத்து என்னும் நிலை ஏற்பட்டாலொழிய போலீஸ் துப்பாக்கிப் பிரயோகம் செய்வதை அடியோடு தடைபடுத்த வேண்டும் என்றும் கோரி தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. துறைமுக வேலைகளுக்குக் கருங்காலிகள் கொண்டுவரப்பட்டதைக் கண்டித்தும் துப்பாக்கிப் பிரயோகத்தால் உயிரிழந்தோர்களின் குடும்பங்களுக்கு அனுதாபம் தெரிவித்தும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

# துறைமுகத் தொழிலாளர் கோரிக்கைகளை ஏற்று சமரசம் செய்

## இந்திய சர்க்காருக்கு கம்யூனிஸ்ட் கட்சி செயற்குழு வேண்டுகோள்

புதுடெல்லி, ஜூன் 18—

துறைமுகத் தொழிலாளர் முன் வைத்திருக்கும் மிகமிகக் குறைந்த பட்ச கோரிக்கைகளை அங்கீகரித்து வேலைநிறுத்தத்தை சமரசமாகத் தீர்க்க வேண்டும் என்று இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் தேசிய நிர்வாகக் கமிட்டி செயற்குழு இந்திய சர்க்காரிடம் வேண்டுகோள் விடுத்திருக்கிறது.

இதுபற்றி செயற்குழு விடுத்த அறிக்கையில் இத்தகராறை சமரசமாகத் தீர்க்க வேண்டும் என்ற நோக்கத்துடன்தான் தொழிலாளிகள் இத்தனை நாட்களாக மிகப் பொறுமையுடன் காத்திருந்தார்கள் என்று குறிப்பிடுகிறது.

சௌத்ரி கமிஷன் சிபார்சு செய்துள்ளதை துரிதமாக ஏற்று அமுல் நடத்த இந்த காரியங்களைக் கூட ஏற்க மறுத்துள்ள துறைமுக நிர்வாகங்களும், சர்க்காரும் தான் இவ்வாறு துரதிருஷ்டமான நிகழ்ச்சிகளுக்கு உத்தரவாதம் என்று அந்த அறிக்கை சுட்டுகிறது.

எவ்வித ஆத்திரமூட்டலுக்கும் இடமின்றி அமைதியுடன் இருந்த சென்னைத் துறைமுகத் தொழிலாளர் மீது துப்பாக்கிப் பிரயோகம் நடத்தியதை இவ்வறிக்கை வன்மையாகக் கண்டிக்கிறது.














Printed & Published by S. Krishnaswamy at Janasakthi Press, 32, Broadway, Madras-1. Editor: P. JEEVANANDAM.